"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892௵ செப்டெம்பர்௴. இலக்கம். 5.

## மரங்களின் வளர்ச்சி.

ஜீவஜாதிகளின் பொதுவான லக்ஷணங்களும் மரவர்க்கம் மிருகவர்க்கம் ஆகிய இரண்டு பெரும் பிரிவுகளின் சிறப் பிலக்கணங்களும் முன் சஞ்சிகையில் கூறி நிறுத்தினோம். இப் பெரும் பிரிவுகளின் உட்பிரிவுகளைப் பகுத்துப் பார்த்து அவற்றின் இலக்கணங்களையும் நிர்ணயிக்குமுன், அப்பிரிவுகளின் முதலாவ தான மரவர்க்கத்தின் பொது உறுப்புக்களையும் அவ்வுறுப்புக்களின் தொழில்களையும் சாமானியமாக நிச்சயித்துக் கொள்வது தகுதியெனக் காணப்படுகிறது.

2. மரவர்க்கத்திற்கு ஆகார சுவீகாரத்தால் வளர்ச்சியும் பிற்கிளையாக்க மெனும் பிரத்தியுத்பாதனமும் அல்லவா இன்றியமையாத இரண்டுதொழில் எனக் கண்டோம. இவற்றுள் முதலாவதாகிய ஆகாரம் உட்கொண்டு வளரும் வளர்ச்சி எவ்விதம் நடந்தேறுகிற தென்று இப்பொழுது ஆராய்வோமாக. மரவர்க்கமென்பதில் ஆல் அரசுமுதலிய உருவில் பெரியமரங்கள் மாத்திரமல்ல, ஜலத்திலும் சுவர்களிலும் கண்ணுக்கும் புலப்படாதபடி படர்ந்துவளரும் எவ்வளவும் சிறியனவாகிய பாசி முதலிய எப்பேர்ப்பட்ட புற்பூண்டு செடி கொடிகளும் உட்படுவதனால், இவ்விடத்தில் நாம் செய்யப்புகும் ஆராய்ச்சியானது சமதிருஷ்டியாய் இவையனைத்திற்கும் பொருந்தும்படி இருக்க வேண்டிய தவசியம். அப்படி சமதிருஷ்டியாய்ப் பார்க்கும்போது மரவர்க்கத்தில் அகப்பட்ட எல்லாப்பதார்த்தங்களும் பொதுவாய் சூக்ஷ்மாந்திரம் அல்லது சிற்றறை (Cell) எனும் முதல் வடிவத்திலிருந்து தோன்றியவைகளாய்க் காணப்படும். கட்டிடங்களுக்குச் செங்கலெப்படியோ அப்படி மரவர்க்கங்களுக்குச் சிற்றறைகள். பொதுவா யிவற்றைச் சோதித்தறிய வேண்டுமானால், சிற்றுருவிளக்கி* (Microscope) எனும் கருவியின் துணையாலன்றிச் சாதித்தலரிதாம். அச்சூக்ஷ்மாந்திரங்கள் ஒவ்வொன்றும் ஒரு அங்குலத்தில் முப்பதிலோர் பங்கு முதல் ஆறாயிரத்தில் ஒருபங்கு வரையிலு ($\frac{1}{30}$-$\frac{1}{6000}$) மான மிகவும் சிறிய ஊடளவு கொண்டவைகளாயிருப்பதே, அக்க்ருவியின் ஆவசியத்தைக் காட்டும். இச் சிற்றறைக்குள் வழு வழுப்பான ஒருசத்து இருக்கின்றது. அதுவே ஜீவராசியனைத்திற்கும் மூலாதாரமான பொருள். ஒரு கணப்பொழுதும் அது ஒரே நிலைமையிலிருப்பதில்லை. நிரந்தரம் வேண்டும் வடிவங்களையெடுத்துக் கொள்வதனால் நம்முடைய முன்னோர்கள் காமரூபியென்று வர்ணித்திருக்கும் வர்ணனை இதற்கே யமையும். கிரமசிருஷ்டிகூறும் வேதசாகைகள்† "அன்னமெழுந்தத தன் பின்னர்" என்று உத்பிரேக்ஷித்ததும் இதனை நினைத்தே போலும். இப்படி ஜீவகோடிக ளனைத்திற்கும் மூல காரணமாய் விளங்கும் இச் சத்திற்குப் பிரதமபீஜம் அல்லது மூலசத்தை‡ (Proto-

* 'பூதக்கண்ணாடி' என்று சாதாரணமாய்ச் சொல்வார்கள்.
† (சாகை=வேதத்தின் ஒர் உட்பிரிவு)
‡ சத்தை=இருக்கை, Existence.

plasm) என்று பேர் கூறலாம். இம் மூலசத்தையைச் சுற்றிலும் மூடியிருக்கும் சுவர்க்கு மூலசத்தைமூடி அல்லது பிரதம பீசாவரணம் (Cell-walls) என்று பேரிடுவோமாக. 'மூலசத்தை' யும், 'மூலசத்தைமூடி' யும், கூடியே, முன் கூறிய சிற்றறை யல்லது சூக்ஷ்மரந்திரமாகிறது. இவ்வறைகள் பல வேறு வடிவங்கள் பெற்றிருப்பினும் சாதாரணத்தில் உருண்டையாகவும் கோழிமுட்டை வடிவமாகவும் அறுகோணுருவ மாகவும் இருப்பது வழக்கம். இவ்வறைகளின் பெருக்கமே மரங்களின் வளர்ச்சி. இவ்வறைகள் பெருகும் மார்க்கத்தை இனி விசாரிப்போம்.

3. மேல்கூறிய சிற்றறைக்குள் ளிருக்கும் வழுவழுப்பான 'மூலசத்தை'யின் அணுக்கள் அதன் நடுவில் நெருக்கமாய்ச் சேர்ந்து அந்தர் பீஜம் (Nucleus) எனும் பேரோடு 'மூலசத்தை'யின் பெருக்கத்தால் தாமும் பெருகத்தக்கனவா யிருக்கின்றன.

அப்படிப்பெருகுங்கால் சிற்றறையைச்சுற்றியிருக்கும் பிரதம பீஜாவரணம் எனும் சுவரின் உட்புறமும் பெருகி நீண்டு அந்தர்பீசத்தின் நடுவே ஊடுருவிச் சிற்றறையையும் அதனுள் அடங்கியிருக்கும் 'மூலசத்தை' யையும் இரண்டு படுத்தி விடுகின்றது.




I. இது தனிப்பட சுபாவமா யிருக்கும் சிற்றறை.
II. இது இரண்டாய்ப் பிளவுபடத் தொடங்கும் சிற்றறை.
III. இரண்டாகப் பிரிவுபட்ட சிற்றறை.

இங்கு காட்டியிருக்கும் படத்தில் இவ்வாறு ஒரு சிற்றறை இரண்டாக விகசிக்கும் தன்மையைக்கண்டு கொள்ளலாம். இப்படியே பிரிந்த சிற்றறைகளும் பெருகி, தனித்தனி மீண்டும் மீண்டும் இரண்டிரண்டாய்ப் பிரிவு படுவதே வளர்ச்சியின் மூலகாரணமாக விருக்கின்றது. இரண்டாகவே பிரிய வேண்டு மென்ற நியமமில்லை. மூலசத்தையின் ஆதிக்கியத்துக்குத் தக்கபடி நாலாகவும் எட்டாகவும் பிரியலாம். இச் சிற்றறைகள் பெருகும் மார்க்கம் மேற்குறித்த படத்தாலு மறியாதவர்கள் எளிதில் அறிந்து கொள்ளும்படி ஒருஉதாரணம் சொல்வோம். ஒரு எலுமிச்சம் பழத்தையே மேல் குறித்த ஒரு சிற்றறையாகப் பாவனை பண்ணினால், அதனைப் புறமே பொதிந்திருக்குந் †தொலியே சிற்றறையின் சுவராகிய பிரதம பீசாவரணமாம். அப்பழத்திற் குள்ளிருக்கும் சாறுகோதுகளே காமரூபியென்று நாம்குறிப்பிட்ட மூலசத்தையாகும். அப்பழத்தை நறுக்கிப் பார்க்கும்போது அதனைப்பலவாய்ப் பகுக்கும் வெண்மையான இலேசுத் தொலிகளே பிரதம பீசத்தை ஊடுருவிச்சென்று பலவாக விபாகிக்கும் உட்சுவர்களாம். இப்படி இலேசான தொலிகளால் பிரிக்கப்பட்ட ஒவ்வொரு துண்டும் தனித்தனி வெவ்வேறு எலுமிச்சம்பழங்களாக உருண்டு திரண்டு உருக்கொள்வதில்லை. சிற்றறைகளோ என்றால் அவ்வாறு பிரிக்கப்பட்ட ஒவ்வொரு அம்சமும் மறுபடியும் வளர்ந்து தனித்தனி வெவ்வேறு சிற்றறைகளாக உருக்கொள்ளும். இங்கு பிரஸ்தாபித்த சிற்றறையும் அதற்குள் அடங்கியிருக்கும் மூலசத்தையும் அம்மூலசத்தை பெருகிப் பல சிற்றறைகளாக விகசிக்கும் மார்க்கமும், மரவர்க்கத்துள் புற்பூண்டு கொடி செடி இவையனைத்திற்கும் பொருந்துவன மாத்திரமல்ல, இதுபோலவே மிருகவர்க்கத்துக் குள்ளும் யானைமுதல் எறும்பீறான எல்லா உடம்பிற்கும் பொருத்தம் உடையனவே.

4. சமகுணமும் சமவடிவுமுடைய இச் சிற்றறைகள், பின்ன குணமும் பின்ன வடிவும் உடைய வேர், தண்டு, கிளை, இலை, பூ, காய் முதலிய வெளி யுறுப்புக்களாகவும் பட்டை, தடிகாதல் முதலிய உள்ளுறுப்புக்களாகவும் உருக்கொண்டு விகசிக்கும் மார்க்கத்தைச் சாமானியமாக இனி விசாரிப்போம். இச்சிற்றறைகள் ஒன்றின்மே லொன்றாய் மணிகோத்தது போல் நிற்கும் காலத்தில் ஆவசியப்படுமிடத்து அவைகளைப் பிரிக்கும் இடைச்சுவர்கள் அழிந்து

† 'தொலி'—'தோலி' என்றும் வழக்குவதுண்டு.

போய் அவையெல்லாம் ஓரே துவாரமுடைய ஒரு சிறுகுழல் போலாவதுண்டு. இப்படி பல குழல்களாகத் திரண்டு, தன்மயப்பட்ட பல ரஸங்களின் போக்கு வரவுக்கு வழியா யமையும்போது அவைகளுக்கு ரஸவாகினி, நாளசங்கிலி அல்லது குழாய்க்கோவை (Vascular system) எனும் பெயருண்டாகின்றது. இக்குழாய்க்கோவைகளே அதிகரித்து நின்று தொலி முதலிய மிருதுபாகங்களாக மாறுபடுகின்றன. மேற்கூறியசிற்றறைகளி னுள்ளிருக்கும் 'மூலசத்தை'வேண்டிய இடத்து வற்றிப்போக அவற்றின் புறச்சுவர்கள் தம்முள் நெருங்கிக் கடினகுணம் பெறுகின்றன. இப்படி வன்மை பெற்ற புறச்சுவர்த் தொகுதிகள் ஒன்றோடொன்று பொருந்தித் தடித்து நீளுங்காலத்தில் தந்து அல்லது நார் (Fibre) எனும் பெயர் பெறுகின்றது. இந்நாரடுக்குகள் (Fibrous tissue) வலுக்கவலுக்க மரத்தின் காடினிய *பாகமான காதல் முதலிய அம்சங்களாக உருக்கொள்ளும்.

இவ்விதமான மாறுபாடுகளொன்றும் அடையாமல் ஆதியிற்சொல்லி நிறுத்தியபடியே மூலசத்தை யடங்கிய சிற்றறைகள் தனித்தனியாகவும் கலந்தும் முன்னிருந்த நிலைமையை விடாமலே நிற்பனவுமுண்டு. இவற்றுள் சில சிற்றறைகள் தமக்குள்ளடங்கிய மூலசத்தையினிடையில்வர்ணகாரிகளான சில ரேணுக்களையுடைத்தாயிருந்து விசேஷமாய் இலைகளிடத்தில் காணும் பசுமை நிறத்தை விளைவிக்கின்றன. இப்படியே சுவை மணம்முதலிய பலகுண பேதங்களையும் வீரியங்களையும் தோற்றுவிப்பதும் இச்சிற்றறைகளுக்குள் ளமைந்து கிடக்கும்'மூலசத்தை'யின் §ரேணுபேதங்களேயாம்.

5. இவ்விதமாகவே தான் மரங்களின் எல்லா அங்கங்களும் சிற்றறை எனும் சூக்ஷ்மரந்திரத்திற்குள்ளிருக்கும்மூலசத்தையின் விகாஸ விகற்பங்களால் உண்டாகின்றன என்பது பிரத்தியக்ஷமாய் நிரூபிக்கக்கூடும். ஆனால் பூர்ணமாய் அப்படி நிரூபிக்க வேண்டுமெனில் அரியசாஸ்திர ஆராய்ச்சியும், சங்கேத மொழிப்பயிற்சியும், அசாதாரணமான சக்திவாய்த்த சிற்றுருவிளக்கி முதலிய கருவிகளின் உதவியுமின்றி முடியாதாகலின் இங்கு இம்மட்டில் நிறுத்தவேண்டியதா யிருக்கின்றது. ஆயினும் மேற்கூறிய நாளசங்கிலி, நாரடுக்கு, தனித்தனியான விடு சிற்றறைகள், எனுமிவற்றை நன்றாயறிந்திருக்கவேண்டியது இனி விவரிக்கப்படும் சங்கதிகளை அறிந்துகொள்வதற்கு அத்தியாவசியகமா யிருப்பதனால் அவற்றைக்கவனித்துத் தாரணைப்படுத்திக் கொள்வது பிரயோசனகரமாயிருக்கும். அழுகிக் காய்ந்து மேற்றோலி நீங்கிய அரசிலையைப் பலருங் கண்டிருப்பீர்கள். அதை உற்றுப்பார்ப்பீர்களாகில் வலையின்னியதுபோல் அதில் அழகுபடத் தோற்றுவதெல்லாம், அவ்விலைக்குள் ரஸம் பரவும்படி அமைந்து கிடந்த நாளசமூகங்களும் அவ்இலைக்கும் முக்கிய நாளங்களுக்கும் மாறுவடிவம் கொடுத்த நாரடுக்குகளுமேயாம் என்பது புலப்படும். அழுகிக் கழிந்து போனவை யெல்லாம் இவ்விரண்டு வகுப்புக்களாகவும் மாறுபடாதிருந்து அவ்விலைக்குப் பசுமை நிறத்தைக் கொடுத்து வந்த விடு சிற்றறைகளே. அரளியிலையை இரண்டு மூன்று தினங்கள் நீரில் போட்டுவைத்து அதனுள்ளிருக்கும் விடு சிற்றறைகள் அழுகியழிந்த பிற்பாடு அவ்விலையை யெடுத்துப்பார்த்தால், மிகவும் அழகாய்ப்பின்னிக் கிடக்கும் நாளசமூகங்களும் இலைவடிவத்தையுண்டுபண்ணின மிக்க லேசான வெளித்தொலியாம் நாரடுக்கும் நன்றாய்ப்புலப்படும். இதன் வெளிநாரடுக்கு மிகவும் பலமுள்ளதா யிருப்பதால் இதனுள் தங்கும் ஜலம் ஸ்படிக பாத்திரத்தில் இட்ட இரத்தினம்போல் பிரகாசித்துக்கொண்டு வெளியி லொழுகிப் போகாம லிருக்கும். பலபல பத்திரங்களையும் இப்படியே பக்குவஞ்செய்து பார்த்தால் அவற்றின் நாளக்கட்டுகளையறியும் சாஸ்திரப்பயிற்சிக்கு உபயுக்தமா யிருப்பதுமல்லாமல், மனதிற்கும் கண்ணுக்கும் களங்கரகிதமான பரமானந்தத்தை விளைவிக்கும் பொழுதுபோக்காகவு மிருக்கும்.

6. இதுவரையும் சொன்னவைகளால் மரவர்க்கங்களெல்லாம்சூக்ஷ்மரந்திரம் எனும்சிற்றறைகளாலும் அவற்றிலிருந்து தோன்றும் நாளசங்கிலி, நாரடுக்கு எனு மிருமுக்கியவிகற்பங்

* காடினியம் = மிகுகடினம்,
§ ரேணு = அணு.

களாலும் ஆக்கப்படுகின்றனவென்றும், இச்சிற்றறைகளுக்குள்ளிருக்கும் பிரதம பீசமென்ற 'மூலசத்தை'யின் பெருக்கமேஅம்மரவர்க்கங்களின் வளர்ச்சி யென்றும் நிரூபிக்கப்பட்டது. அம் மூலசத்தை யெப்படிப்பெருக்கமடைகின்றதென்பதை இனி யாலோசிப்போம். மூலசத்தையைமூடியிருக்கும் சுவருக்கு ஒரு விசேஷகுணமுண்டு. அதென்னவென்றால்,அச்சுவரினிருபுறமு மிருக்கிற சிலசில விசேஷதிரவியங்களைத் தன்வழி மறுபுறம் புகுவித்துக் கலப்பித்தலேயாம். இக்குணத்தால் ஒரு சிற்றறையில் 'மூலசத்தை' பெருகியிருந்தால் அதன் சுவர் வழி அம்மூலசத்தையின் சில ரேணுக்கள் அடுத்த அறைக்குள் பிரவேசிக்கும். ஆதலால் ஒருவரியிலுள்ள சிற்றறைகளில் 'மூலசத்தை' பெருகினால் அதுவே அடுத்த வரிகளிலுள்ள சிற்றறைகளும் பெருகக் காரணமாகிறது.முதல் வரியிற்றானே எப்படி பெருக்கம் நேரிடுகிறதென்றால், மேல்கூறியபடியே அந்த வரியிலுள்ள சிற்றறைச் சுவர்வழி வெளியிலிருக்கும் நீர், காற்று என்னும் இவை யிரண்டிலுமுள்ள சில பௌதிகங்கள் அந்தச் சிற்றறைக்குள் பிரவேசிப்பதனாலேதான். ஆனால் சிற்றறைகளுக்குள்ளிருக்கும் பதார்த்தங்கள் சுவர்வழியே வெளிப்பட்டு அதிலிருக்கு மூலசத்தை குறையவுங் கூடியதன்றோ என்றால் அப்படியாகாது.ஏனெனில், இரண்டு நெகிழ்ச்சியான பொருள்களுக்கிடையில் இதுபோன்ற ஒரு சுவரிருந்தால், இவ்விரண்டினுள், பௌதிகக்கலப்பால் கனம் கூடியதெதுவோ அதனிடத்திலேயே மற்றதன் பிரவேசம் நேரிடுவது இயற்கை விதியாயிருக்கின்றது. இதற்குச் சாதாரணமாய்ச் சொல்லுகின்ற திருஷ்டாந்தம் என்னவென்றால், ஊத்தாம்பெட்டியெனும் ஊதுபைக்குள் சொற்ப நீரும் சீனியும் இட்டு வாயை இறுகக்கட்டி சுத்தஜலத்தில் மிதக்கவிடுவோமானால், சுத்த ஜலம் ஊதுபைக்குள் கிரமமாய்ப்புகுந்து அப்பையை விரியச்செய்வதுமன்றி அதை வெடிக்கச் செய்யினுஞ் செய்யும். ஊதுபெட்டியில் சுத்தஜலத்தை யடைத்து சீனி யதிகமாய்க் கலந்த ஜலத்திலோ தேனிலோ அதைவிடுவோமானால், ஊதுபைக்குள்ளிருக்கும் ஜலம் தன்னிற் கனங்கூடிய ஜீனிரஸத்தாலும் தேனினாலும் இழுக்கப்பட்டு பையும் வரவரச் சுருங்கிவிடும். மாங்காய், எலுமிச்சங்காய் முதலானவைகளை உப்பிலிடும்போதும் உப்புக் குறைந்து நீர் அதிகப்பட்டு அளவிற்கு மிஞ்சி யிருக்குமேயானால், உப்பிலிட்டகாய்கள் நீருண்டு கனத்து அழுகிப்போவதும், உப்பதிகப்பட்டு நீர்க் கனங்கூடுமாயின் அக்காய்கள் தங்கள் நீர்ச்சத்தையை யிழந்து சுருங்கிக் கெட்டியாய் வெகுநாளிருப்பதும் யாவரும் அறிந்தவிஷயமே. இந்தக் காரணத்தினாலேதான் உவர்நிலங்கள் விளையாதிருப்பதும். மலையாளத்தில் "வெள்ளூற்று" என்றபூமியில் தெங்குமுதலிய மரங்களுண்டாவதில்லை. இந்தப்பூமியில் ஜலம் ஓயாமல் பெருகியும் மரம் வளராதிருப்பதற்குக் காரணமென்னவென்று யோசித்துப் பார்த்ததில்,அந்தஜலத்தில் இரும்புச்சத்தை மிகுதியாய்க் கலந்திருப்பதால் அந்த ஜலத்திலிருக்கும் போஷணைத்திரவியங்கள் தெங்கின்வேர் வழி உட்புகாமல், வேரிலுள்ள சத்தையே மேற்காட்டியவிதி யனுசரித்து நீரில் பிரவேசிக்கின்றதெனக் காணலாயிற்று. இப்படி நிரூபிக்கப்பட்ட இயற்கைவிதியை யனுஸரித்தேதான் மரங்களிலிருக்கும் பிரதமபீசமென்ற மூலசத்தை தன்னிலும் கனங்குறைந்த காற்று, நீர் இவற்றிலுள்ள சத்தைகளைத் தங்கள் சுவர்வழி உட்கொண்டு பெருக்கம் அடைகின்றது.

7. சூக்ஷ்ம ரந்திரத்துக்குள் ளிருக்கும் மூலசத்தை பெருகி அதனைச் சுற்றியிருக்கும் பிரதம பீஜாவரணமெனும் சுவர்வழி அடுத்த சிற்றறைகளுக்குள் ஊறிப் பரவுவதே பொதுவாய் வளர்ச்சிக்கு ஏதுவாமென்றும், அம்மூலசத்தையின் பெருக்கத்துக்குக் காரணம் தன்னைச் சுற்றியிருக்கும் நீர், காற்றுமுதலியவற்றிலுள்ள தக்க பௌதிகங்கள் ஊறுகாய் ஊதுபை முதலிய திருஷ்டாந்தங்களால் நிரூபிக்கப்பட்ட விதியின்படி சிற்றறைக்குள் பிரவேசித்து மூலசத்தையோடு அபின்னமாய்க் கலத்தலேயாகுமென்றும் இதுவரையும் கூறி நிறுத்தினோம். மிருகவர்க்கத்திலும் மரவர்க்கத்திலு மடங்கிய ஜீவகோடிகளனைத்தின் வளர்ச்சிக்கும் முற்றிலும் பொதுவாக இசையு மிலக்கணமிதுவே. ஆனால் இவ்விதியின் பூர்ணமான அமைதி பாசி, காளான் முதலான மிகவும் கீழ்ப்பட்டதரமான

சராசரப்பொருள்களிடத்து மாத்திரமே வெளிப்படையாய் விளங்கக்கூடிய நிலைமையி லிருக்கிறது. இவற்றிற்கு மேலான புல் பூண்டு கொடி செடி மரம் இவைகளிடத்தில் அமைந்துகிடக்குஞ் சிற்றறைகள் பட்டை முதலியவற்றால் பொதிந்துகிடப்பதனாலும், அதிக உயரமும் பருமனும் விரிவுமுடைய கிளையாதிகளாகப் பரந்து நிற்பதாலும் அச்சிற்றறைகளுக்குள்ளிருக்கும் மூலசத்தை நேருக்குநேராய் நீர், காற்று இவைகளிலுள்ள பௌதிகங்களை இழுத்துட்கொள்ளச் சத்தியற்றனவாய்ப் போவதனால், அந்த அந்தமரவினத்திற்குத் தக்கபடி ஆகார ஸ்வீகாரத்துக்காக வேர், இலையெனும் இரண்டு விசேஷ உறுப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, இவற்றுள் வேர் தனது தாய்மரத்தை நிலையில் நிறுத்துவதோடு, மண்ணிலிருக்கும் தனக்குப் பிரயோசனந்தரும் பௌதிகங்களையும் நீரையும் இழுத்துட்கொள்ளுமென்பது யாவருக்கும் தெரிந்ததே. ஆனால் எப்படி யவற்றை உட்கொள்ளுகிறது என்பதைத் தெளிவாயறிய விரும்புவோமாகில் கீரை வெண்டை முதலிய யாதாவது ஒரு செடியின் வேர்களை முறிவுபடாமல் பிடுங்கி யெடுத்து நீரில் அலம்பிப் பார்க்கவேண்டியது. அப்படிப்பார்த்தால் அச்செடியின் ஆணிவேரும், அதில் நின்று பலவாய் வெடித்த பக்கவேர்களும், அப்பக்கவேர்களிலிருந்து பலவாய் வெடித்த கிளைவேர்களும், கடைசியில் மயிரிழைபோல் மிகச் சிறியனவாயும் வெண்மையாயு மிருக்கும் பொடி வேர்களுங் காணப்படும். இப்பொடி வேர்கள்தாம் உண்மையில் ஆகார சுவீகாரஞ்செய்வன. அவற்றுளொன்றை யெடுத்துப்பார்க்கில், அதன் கடைசி நுனியில், தொலியினால் பொதியப்படாமல் மிக்க மிருதுவாயிருக்கும் ஒருதலைப்புக் காணலாகும். அத்தலைப்பிலிருப்பது யாதொரு பந்தத்துக்குள்ளு மகப்படாத சிற்றறையே. சிற்றுருவிளக்கிக் கண்ணாடியால் பார்த்தால் அச்சிற்றறைகளின் வடிவமுதலான விசித்திரங்களைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டு கொள்ளக் கூடும். அவைகளுக்குள்ளிருக்கும் மூலசத்தைதான், ஊதுபை ஊறுகாய்த் திருஷ்டாந்தங்களால் விளக்கிய விதிப்படி, மண்ணிலும் ஜலத்திலுமுள்ள பௌதிகங்களை யிழுத்துட்கொள்ளுகின்றது. அப்படி யுட்சென்று தன்மயப்பட்ட பௌதிகங்கள் வெகுதூரத்திலிருக்கும், தண்டு, கிளை, யிலை, பூ, காய் எனு மிவைகளைச் சென்றடையவேண்டி யிருப்பதனால், அடுத்த ஒவ்வொரு சிற்றறையிலும் புகுந்து போவது தாமசமும் பிரயாசமுமாமெனக் கண்டு, அப்பௌதிகங்கள் மரத்தின் சரீரமுழுதும் நேரே வியாபிக்கும்படி நேரான சில பந்தாக்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைதாம் நாம் முன்கூறிய நாளசங்கிலி அல்லது குழாய்வரி. இக்குழாய்கள் அந்தஅந்த மரத்தின் ஆகிருதிக்கும் ஜாதிக்குணத்திற்கும் தக்கபடி விரிந்தும் சுருங்கியுமிருக்கும். எப்படியிருப்பினும் அவற்றின் உற்பத்தி முன்காட்டியபடியே சூக்ஷ்மரந்தரங்கள்,மணிபோ லொன்றன்மேலொன்றாய்க் கோக்கப்பெற்று, இடைச்சுவரழிய, மத்தியிலிருந்த துவாரங்கள் நிலைநிற்கச் சம்பவித்ததேயாம்.

8. இப்படியே வாயுவிலுள்ள அம்சங்களையிழுத்துட்கொள்ளுவதற்குத் தண்டு கிளை முதலாகிய பட்டை பொதிந்த பாகங்களுக்குப் போதுமான சக்தியில்லாததனால், அத்தொழில் நடந்தேறும்படி இலையாகிய உறுப்பு உண்டாயிருக்கின்றது. பொதுவாக இலைகளின் மேற்புறத்தில் இதற்காகச் சிறுசிறு துவாரங்கள் அமைக்கப்பட் டிருப்பதுண்டு. அத்துவாரங்களுள் காற்றும் வெயிலும் படவே, அவற்றுளிருக்கும் சிற்றறை நிவாஸமான மூலசத்தை, வெயிலின் பிரேரணையால், காற்றிலிருந்து தனக்கு வேண்டிய பௌதிகங்களை யுட்கொண்டு தம்மிடத்திலிருக்கும் தமக்குத் தோஷகரமான சில வாயுக்களை வெளியாக்குகின்றன. இதுவே பொதுவாய் இலைகளின் தொழில்.

9. இவ்விதமாக இலையாலும் வேராலு முட்புகுந்த பௌதிகங்கள் ரஸமாய்மாறுபட்டு நாளதந்துக்களின் வழியாய் மரமெங்கும் வியாபித்து அதனை வளர்த்துகின்றது: இப்படி வளர்வதும் நாம் முன்குறித்தபடி மூலசத்தையின் ஆதிக்கத்தால் சிற்றறைகளிரண்டாய்ப் பிரிவுபடும் மார்க்கத்தை யனுசரித்தே கிளைகளின் கடைநுனிபெருத்து விகசிக்கின்றதன்றி வேறில்லை.

10. இப்படியெல்லாம் சோதனை செய்தறிந்தால் நம்முடைய கொல்லையிலுள்ள செடி கொ

டிகள் ஒவ்வொன்றும் எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுக்கும்! தேவேந்திரலோகத்திலுள்ள கற்பகாதிவிருக்ஷங்கள் இந்திராணிபோகம் அமிர்தபான முதலிய சிற்றின்பங்களுக்கு ஆஸ்பதமாயிருக்கக் கூடுமேயல்லாது இத்தகைய சிதானந்தம் விளைவிக்கத்தக்கனவோ யாதோ அறியோம்! ஒரு தும்பைச்செடியைப் பிடுங்கிப் பார்க்கினும் இவ்வகை யறிவுடையோர்க்கு, அதன் மூலகாரணமாகிய சூக்ஷ்ம ரந்தரமும் அதிலடங்கிய அற்புதமான மூலசத்தையின் வல்லபமும், அதுவேண்டியவழி, தானேஇரண்டுபடப் பிரிந்தும் அப்படியே பலவாய் விரிந்தும், முறையே நாரடுக்கா யொருபுறமும் நாளதந்துக்களாய் மற்றொருபுறமும், விடு சிற்றறைகளாய் வேறொருபுறமுமாக முதலில் மாறுபட்டு, பிற்பாடு அந்தச்செடியின் சாதிக்குணத்திற்கேற்க,வேர், தண்டு, இலை, காய்களாக விகசித்து, அவ்வாறு விகசித்த சமஷ்டிவடிவாகிய அச்செடியின் சம்ரக்ஷணைக்காக அம்மூலசத்தையே பொடிவேர்களின் நுனியிலிருந்துகொண்டு மண்ணிலுள்ள பௌதிகங்களையும், இலையின் மேற்புறத் துளைகளிலிருந்துகொண்டு, காற்றிலுள்ள பௌதிகங்களையும் இழுத்து அம்மரத்தை யூட்டுவித்து வளர்க்கும் விசித்திரமும் இவ்விதம்நடத்தும் சித்விலாசமும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரத்தியக்ஷப் படுவதினால் அல்லவா,

"பண்ணே னுனக்கான பூசைபொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே,
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமு
நண்ணேன்"

என்று தாயுமானவர் அருளிச் செய்தனர்!

இத்தகையபேரின்பம் எங்கும் எளிதிற் பெறும்படியாக இருக்க அதனைத் தினைத்துணையேனும் நினைத்துப்பாராமல் "பொழுதுபோகவில்லை, பொழுதுபோகவில்லை" என்று மனோவேகத்திலும் கடுகியோடும் காலகதி ஏதோ தம்விஷயத்தில் தள்ளாடு நடையடைந்ததாகப் பாவனை பண்ணி, "வாழ்நாட் கலகாய் வயங்கொளிமண்டிலம்" [1] ஆகிய சூரியனை சவுக்கால்அடித்து விரட்டல்போல சூதாட்டமுதலிய போராட்டங்களிலும் புறங்கூறலாதி வெறும் பாவங்களிலும் முயன்று பயின்று தம் வாழ்நாளை வீணாக்குகின்றார்கள். இவ்வித பொழுதுபோக்கன்றோ கையிலிருக்கும் பாயசத்தைக் கவிழ்த்துவிட்டு முழங்கையை நக்கும் திறமை!

"தேன்கமழ் திரளையைச் சிந்திச் சந்தியால்
கூன்கையில் விழுந்துளி கொண்டதன்மை
யே." (2)

11. மரவர்க்கத்தின் இரண்டாம் தொழிலாகிய பிரத்தியுத்பாதன சக்தியைக்குறித்து இனியொரு சந்தர்ப்பத்தில் யோசிப்போம்.

பி. சுந்தரம்பிள்ளை. M. A.

[நீதிவாக்கியங்கள்.]

உண்மையில் பெருமைக்கு உரியவர் யார்?

உண்மையில் பெருமைக்கு உரியவர் யார்? அகந்தையும் பகையு மற்றவர் எவரோ, புலன்களை இழுக்கும் இன்பத்தினிடையினின்று சுத்தத் துறவியாய் நடப்பவர் எவரோ, பிறர் இகழுங்காலத்தும் தம்நாவைக்காப்பவர் எவரோ,பிறர் கெடுக்குங்காலத்தும் திரும்பக் கெடுக்காதவர் எவரோ, தாம் ஓரிடத்துமிரவாது உயிருள்ளவற்றிற்கெல்லாம் மிகவருந்தி உதவுபவர் எவரோ, தாய்தந்தையர்க்கு மகிழ்ச்சியும் உறுதியும் ஊன்றுகோலுமாயிருந்து நாளெல்லாம் ஓய்வின்றி உழைத்து நடப்பவர் எவரோ, விருந்தோம்பித் தம்மனத்தினின்றும் பொறாமையை அகற்றுபவர் எவரோ, வேதப்பிரமாணங்களை மிக்கபணிவோடு ஆராய ஆசையுடையவர் எவரோ, அகத்தூய்மையும்புறத்தூய்மையுமடைந்து பாபத்தைச் செய்யாதவர் பேசாதவர் எண்ணாதவர் எவரோ, பேராசைகொண்டு கெட்ட எண்ணத்திலும் பாவச்செய்கையிலும் தவறிச் செல்லாதவர் எவரோ,மனையை அலங்கரிக்கும் இனிய மனையாளைவிட்டு அலைந்துதிரியாத ஆசையையுடையவர் எவரோ, நியாயமானபோரில் பயத்தைத்துறந்து தீரமனத்தோடு இருப்பவர் எவரோ,அடுத்துவரும் மரணத்துக்கு அஞ்சாது மரணச்சுவாசத்திலும் உண்மையையே பேசுபவர்எவரோ,தம்சகோதரர் செவ்வையாய்

(1) நாலடியார்

(2) பிரமகீதை.

நடப்பதற்கு வழிகாட்டும் பேரொளிபோன்ற நன்னெறியையுடையவர் எவரோ, எல்லோரையும் நேசித்து யாவராலும்நேசிக்கப்பெற்று ஒன்றுக்கும் பயப்படாது ஒன்றையும் பயமுறுத்தாது இருப்பவர் எவரோ, உலகத்துள்ளனவெல்லாம் தம்மைப்போல் அருமையுள்ளனவென்றும் தம் உறவிலும் மேலானவையென்றும் எண்ணுபவர் எவரோ, தமக்குரிய பெருமையைத் தாம் கொண்டாடக்கருதாது தம்பெருந்தன்மையால் பிறருக்கு உவகையோடு அளிப்பவர் எவரோ, வெகுளியும் பகையுமடங்கவும் கசந்திருக்கும் விரோதியும் சமாதானத்தை நாடவும் முயலுபவர் எவரோ, கடவுள்வழிப்பட்டு நியமத்திற்குள்ளடங்கி மனதார உண்மை நிலை தவறாது உழைப்பவர் எவரோ, அவரே மேலான பெருமைக்கு உண்மையில் உரியராவர்.

(மஹாபாரதத்திலிருந்துமொழிபெயர்க்கப்பட்டது.)

எஸ். நாராயணசாமி அய்யர்.

---

## * மனோன்மணீயம். II.

மறுநாட்காலையில் அரண்மனைக்குக் குடிலன் வந்தவுடன், மனோன்மணியின் விவாகத்தைப் பற்றிச் சுந்தரமுனிவர் கூறியவற்றை யவனுக்குச்சொல்லி, அவன் ஆலோசனை யென்னவென்று ஜீவகன் வினவக், குடிலன், தான்மிகவும் மனமகிழ்ச்சி யடைந்ததாகப் பாவித்துத் தானும் அவ்விதமே யோசித்திருந்ததாகக் கூறினதுமன்றி,

"அறியார்
பலவும் பழிப்பர். நமக்கதி லொன்று
மில்லை. இன்றேதுதேவு வம்."

என்றான். அப்படிச் சொன்னதற்குக் காரணம் என்னவென்று ஜீவகன் கேட்கக், குடிலன், பிள்ளை வீட்டுக்காரரே முதன்முதற்கலியாணம்பேசவருதல்உலகவழக்கமென்று எடுத்துக்காட்டி, "ஆயினும், ஆத்திரந் தனக்குச் சாத்திர மென்னை?" என்று சாதுரியமாகக்கூறினனாக,ஜீவகன்அதற்குஇணங்காமல், ஓர் தக்கஉபாயஞ் செய்யும்படி குடிலனைக் கேட்டான். 'பாஷை, ஆசாரங்கள் முதலியவற்றால் தமிழ்நாடென்று விளங்கும் "நன்செய்*" நாடு, புருஷோத்தமவர்மனால் ஆளப்பட்டு வருகிறது; அது மிக்க வளமுடையது; அதை நம்வசம் விட்டு விடும்படி கேட்போமானால்,புருஷோத்தமவர்மனது குறிப்பறியலாம்; போருக் கெழுவான், அல்லது, விவாக மூலமாய்ச் சமாதானத்தை நாடுவான் ; இதுவே தக்க உபாயம்' என்று குடிலன் கூறினான்.

நம்தேசத்தார், எவ்விஷயத்திலும், உள்ளதையுள்ளபடி சொல்லாமற் கொஞ்சம் பெருக்கியே கூறுவர், என்று ஐரோப்பியர் குற்றஞ் சாட்டுவதுண்டு. தற்காலத்துத் தேசாபிமானிகளுங்கூட இதை ஏகதேச வுண்மையென்றாவது ஒத்துக்கொள்ளல் வேண்டியதாய்த்தானிருக்கிறது. நம்மவர்களில் அநேகர் சாதாரணமாய்ப் பேசுவது, அடிக்கடி, "கொங்கணியன் புலிகண்ட கதை" யாகவே முடிகிறது. இதன் உண்மையை நம் காவியங்களில் நன்றாய்க் காணலாம். இலக்கியத்தின் பண்பே அச்சார்புடைத்தாயினும், நம் பாவலர்கள், அதை மிகவும் கெடுத்து விடுகிறார்கள். வள்ளுவரிலும் கம்பரிலுமே,

"செல்லாமையுண்டே லெனக்குரை: மற்றுநின்
வல்வரவுவாழ்வார்க்குரை." (பிரிவாற்றாமை.)

[வெந்
" விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்
துருகியதுடனேயாறிவலித்தது குளிர்ப்புளூற."

முதலியவற்றைப் போன்றவை யேராளமாயிருப்பின், மற்றப் புலவர்களைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? இவ்வித அலங்காரங்களில்லாமலிருப்பதே, இந்நாடகத்துக்கு ஓர் பேரலங்காரமாகின்றது. ஆயினும், "நன்செய்" நாட்டின் வருணனையைச் சிலர் மட்டுக்குமிஞ்சினதாகப் பழிக்கலாம்: ஆனால் அது சந்தர்ப்பத்துக்குத்

* இந்நவீன நாடகம் சென்னை யூனிவர்ஸிடி சபையில் ஒருவரும் திருவநந்தபுரம் மஹாராஜா காலேஜில் நீதிசாஸ்திர பண்டிதருமாகிய பி. சுந்தரம் பிள்ளை எம். ஏ. அவர்களால் இயற்றப்பட்டது. விலை ரூ 2. விவேகசிந்தாமணிக்கு முன் பணம் கட்டிய கையொப்பக்காரர்களுக்கு ரூ 1-8. குறைந்த விலைக்குக் கொடுக்கச் சில காபிகளே யுள்ளன. வேண்டியவர்கள் சீக்கிரம் அறிவைப் பரவச்செய்யும் சபை காரியதரிசிக்கு எழுதிக்கொள்ளல் வேண்டும்.

ப-ர்.

* தற்காலத்தில் 'நாஞ்சநாடு' என்று வழங்குகிறது.

தக்கதெனக் கொள்ளலுமாம். அன்றியும் முழுவதும் மட்டுக்கு மிஞ்சினதாக வில்லை: பின்வரும் பாக்கள் அந்நாட்டின் பயிர்வளத்தை வருணிக்கின்றன:—

“ தூவி*யால் தம்உடல் நீவிடி†ற் சிரிக்கும்
சிறுமியரென்னவச் செழுநிலநங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனம் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பில்‡செல்வப்
பயிர்மயிர்சிலிர்த்துப் பல்வளம் நகுவள்.$”

அரசன் தான்கூறிய உபாயத்திற்கு உடன் பட்டவுடன், குடிலன், காரியம் சித்தியாவது தூதுவனுடைய திறமைக்குத் தக்கபடி யென்று சொல்லி, முடிவில், தன் சாதுரியத்தினால், தன்மகன் பலதேவனையே தூதுவனாக நியமிக்கும்படிசெய்துகொண்டான். நடேசனைத் தூதுவனாக நியமித்த சுந்தர முனிவரது புத்திக் குறைவை இருவரும் இகழ்ந்தானபின், குடிலன் தன்வீட்டுக்குச் சென்றானாக, அரசன் அவனைத்தன்மனதிற் புகழ்ந்து கொண்டிருக்கையில், சில பிரபுக்கள் வந்தார்கள். அவர்களுடன், அரசன் மாட்டு மெய்யன்புள்ளவனும், சத்தியவந்தனுமான நாராயணன் என்ற இராணுவவீரனும் வந்தான். அரசனும் பிரபுக்களும் குடிலனைப்புகழ்ந்தனராக, அவன்மெய்க்குணத்தை யறிந்த நாராயணன் மட்டும், குறிப்புகளால் அக்குணத்தை வெளிப்படுத்த முயன்றும் ஒன்றும் பயன்படவில்லை. பிற்பாடு யாவரும் செல்ல, நாராயணனும் அரசனது ஸ்திதியையும் புத்திக் கூர்மையின்மையையும் நொந்துகொண்டே சென்றான்.

ஊர்ப்புறத்து ஒருபக்கத்தில், ஆநந்தபுருஷனாகிய நடராஜன், சூரியோதயத்தைப்பார்க்கவிரும்பி, “என்றருங்கடை சென்றயாம மியம்புகின்றன§” வாகிய கோழிகள் வீட்டு உச்சிகளின்மேனின்று சுற்று நோக்குதலையும்,

‘‘இருட்பகை யிரவியிருளெனத் தம்மையும்
கருதிக்காய்வனோ வென்றயிர்த் திருசிறைக்
கையான்மார்பிற் புடைத்துக் கலங்கி
மெய்யாந்தம் பெயர்விளம்பி வாயசம்
பதறியெத் திசையிலுஞ் சிதறியோடு’’ தலையும்,

மற்றப் பறவைகளையும் பார்த்துக்கொண்டும், வாணியொருநாள், தான் சூட்டியகுவளைமலரை,

“ அன்பாய் மந்தகாசத்தொடு
வாங்கியும், மதியாதவள் போ லாங்கே
யோடுமேவ் வாய்க்கால் நீரிடை விடுத்துச்
சிறுமியர் குறும்பு காட்டிச் சிரித்த” தைப்

பற்றி நினைத்துக்கொண்டு மிருக்கையில், “வாணி” யென்ற சப்தத்தைக் கேட்டுச், செவிகொடுத்து உற்றுக் கேட்டான். நடந்த சங்கதியாதெனின்: சிறிதும் வெட்கமற்ற விடனாகிய ப்லதேவன், தான் திருவநந்த புரத்திற்குத் தூது போகுமுன், தன்னாற் கற்பழிக்கப்பட்ட ஓர் மாதைக்காண விரும்பி அவள் வீட்டுக்குச்செல்ல, பலதேவனுக்கு வாணியை மணம்புரியப் போகிறதாகக் கேள்வியுற்றிருந்த அம் மாதின் நற்றாய், வெகு விசனத்துடன் தன் வீட்டுக்கு வர வேண்டாமென்று அவனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தாள். பிற்பாடு பலதேவன் தன் சோரநாயகிக்குக் கொடுக்கும்படியொரு பொற்றொடியைக் கொடுத்துவிட்டுப் போய் விட்டான். இவற்றை யெல்லாங் கண்ட நடராஜன், பாதகனாகிய பலதேவனுடைய நடக்கைகளைப்பற்றி யாச்சரியப்பட்டுக் கொண்டிருக்கையில் நாராயணன் வந்தான். அவன்மூலமாய் நடராஜன், பலதேவன் திருவநந்தைக்குப் போகுங் காரணத்தையும், அவனை மணம்புரிய மாட்டேனென்று வாணி வெறுத்ததையு மறிந்தான். பின் சொன்னதால் நடராஜனடைந்த சந்தோஷத்தைக் கண்ட நாராயணன்,

“ என்னேயுன்மதி ! எந்திழையார்[1] சொல்
நீர்மேலெழுத்தாம். யாரறிவாருளம்?”

என்று மனிதர்கள் வழக்கமாய்ச் செய்வது போலமாதரைப் பழித்தானாக, வாணியின் அன்பையும் புருஷரில் ஒருவனாகிய பலதேவ்னின் நடைகளையும் நன்குணர்ந்த நடராஜன், புருஷரே சிறிதும் இரக்கமின்றிச் சுயநயம்பாராட்டும் பாதகர்ளென்று கொதித்துச்சொல்லி, மறுபடியும்,

* மெல்லிய இறகு. † தடவினால்.
‡ கேடில்லாத
$ Compare:
“உடுத்த நீராடையளுருவச் செவ்வியள்
பிடித்தருநடையினள் பெண்மைநன்றிவன்
அடித்தலந் தீண்டலி னவனிக்கம்மயிர்
பொடித்தனநிகர்க்குமாற்புல்லென் றுன்னுவாள்.
—கம்பன்.”
§-கம்பன்.

1 பெண்கள்.

"புருடரோ விவரும்! ........

. . . . . . . . . . . . . .

அவா[1] விற்களவிலை. அன்போ வறியார்.
மணமுமவர்க்கொரு வாணிபம்! அந்தோ!
சீ! சீ! என்னித்தீயவர் செய்கை!
மாசிலா[2] வையகத் திவ்வுயிர் வாழ்க்கை
யாம்பெருங் கட லுட்போம் மரக்கல[3]னும்
ஆடவர் நெஞ்சம், அறத்துறை யகன்று
நீடிசை சுழற்று நிலையிலாக் காற்றா
நிண்ணயமற்ற[4] வெண்ண மியக்கச்
சென்றுழிச் சென்று நன்றறி வின்றி
யலையாவண்ணம், அறத்துறைக் குடாவி
னிலைபெற நிறுத்து நங்கூரமாய்ப், பின்னுஞ்
செய்வினை முயற்சியிற் பொய்வகைப் புன்னெ
கெற்றுண் டகன்று[5] பற்றொன் றின்றி [றிக்
யாசையாந் திசைதொறு மலைந்து திரிந்து
கெடாவணங் கடாவி[6]க் கெழுமிய[7] வன்புசேர்
அறப்பிடி கடைப்பிடி யாகக்காட்டி
சிறப்புயர் சுகத்துறை சேர்க்கு சுக்கானாய்,
நின்றது மங்கையர் நிலைமை யென்று
நினையா மனிதர், விலங்கினு[8]ங் கீழா
யனையார் தருசிற் றின்பமே யவாவி,
வாழ்க்கைத் துணையாய் வந்தவர் தம்மை
தாழ்த்துஞ் சேறாய் மாற்றுவர்.

. . . . . . . . . . . .

துதிபெறு மன்புநற்
குணமுமுளார் இல்துணைவ ராயின்[9]
இல்லதென்னுலகில்? இவற்றுடன் கல்விசேர்
நல்லறிவுளதேற் பொன்மலர் நாற்றம்
பெற்றவா றன்றோ?"

என்று மாதரைப் பலவாறாகப் புகழ்ந்தான். தற்காலத்தில் நம்மவர்கள் இப்புத்தி மதியைக் கைக்கொண்டு நடப்பாராயின், இப்பொழுது அனுபவிக்குங் கஷ்டங்கள் பலவற்றினின்றும் நிவர்த்தியடைவது மின்றி, எவ்வளவோ சுகத்தையும் சீர்திருத்தத்தையும்அடைவார்களென்பது சிறிதும் சந்தேகிக்கத் தக்கதன்று.

இதுநிற்க: திருவநந்தபுரத்தில், புருஷோத்தமவர்மன், மனோன்மணி ஓர் உத்தமனைக் கண்ணுற்றதுபோலவே ஓர் மகா ரூபவதியைக் கனவிற்கண்டு, நாளுக்குநாள் விரகம் மிகுந்து 'சித்தம் மத்துறுதயிரிற் றிரிய,' யாரோடாயினும் போர்புரிந்தால் ஒருவேளை விரகம் மாறுமென்று நினைத்திருக்கையில், ப்லதேவன்சென்றடைந்தான். பலதேவன், தன் அலுவலைச் சுற்றிச் சுழற்றித் தெரிவித்து மனோன்மணியைப் பற்றியுஞ் சொல்ல, சேரன், ஒன்றுக்கு மிணங்கானாய், ஒரு வாரத்துக்குட் படையெடுத்து வருவதாகச் சொல்லி யனுப்பிவிட்டுத் தன் சேனாபதிக்கும் யுத்தத்துக் கெழும்படி கட்டளையிட்டான். சேரதேசத்து இராணுவ வீரர்களின் சூரத்துவத்தை யிக்களத்திலும் பின்வருஞ் சில களங்களிலும் நன்றாய்க்காணலாம்.

மூன்றாம் அங்கம் முதற்களம் பாண்டியன் அரண்மனையில். தான் பலதேவனிடம் இரகசியமாய்ச் சொல்லியனுப்பியபடி போரே விளையுமென் றறிந்திருந்த குடிலன், அரசன்மனதை அச்சமாசாரத்துக்குப் பக்குவப்படுத்தும் பொருட்டும், பலதேவனுக்கு மனோன்மணியைக்கலியாணஞ் செய்விக்கும் பொருட்டும், சேரன் வெறிகொளும் நெஞ்சனாதலால் ஒருவேளை கலியாணத்துக் கிசையானென்று சந்தேகித்தும், ஜீவகனைப் புகழ்வதினாலேயே புருஷோத்தமனைத் தாழ்த்தியும், பலதேவன் மனோன்மணியிடத்து மிக பக்தியைக் குறிப்பிக்கும் வசனங்களைச் சொன்னதைத் தான் கேட்டுள்ளதாகப் பொய் பிதற்றியும், ஒருவேளை சேரன் பலதேவனை யிகழ்ந்திருப்பின் அது ஜீவகனையே பழித்ததை யொக்கு மாதலின் போர் புரியவேண்டி வருமென்று சுட்டிக்காட்டியும், பலவாறாக ஜீவகன் மனதைத் தன் கோரிக்கைப் படி யெல்லாந் திருப்பிக்கொண்டிருக்குங் காலத்தில், புருஷோத்தவர்ம னிடமிருந்து படையெடுத்து வருவதாக ஓலைவர, சுத்தனாகிய ஜீவகன் குடிலனது வருமுன்அறியும் மதியைப் புகழ்ந்து, வீரியங்கூறி, போர்புரியத் தீர்மானித்துச் சென்றான்.

குடிலனிடம் ஓர் மாலையைப்பெற்ற சேவகனொருவன் அவனை

"நின்மனம்
நினைந்தவை யனைத்தும் நிகழுகவொழுங்கே",

என்று வாழ்த்திப்போக,அதன்மெய்க்காரணத்தைக் கொஞ்சநேரம்மறந்து, தன் எண்ணங்களெல்லாம் வெளியாய் விட்டனவோ வென்று 'சாம்பற் பூசணிக்காய் களவாண்டோ

1. பேராசை.
2- குற்றமில்லாத
3. கப்பல்
4- நிலையற்ற
5. அடிபட்டு அகன்று
6. நடத்தி
7. சிறந்த
8. மிருக ஜாதியினும்
9. மனைவியாயின்

னொருவன் தன் தோளைத் தொட்டுப்பார்த்துக் கொண்ட கதை'யாகப் பலவிதமாய்ப் பயந்தான். * பிற்பாடு 'கள்ளமனந்தான் துள்ளும், என்பதை நினைத்து ஒருவாறு தெளிந்தபின், எப்படிப்பட்ட துன்மார்க்கனும் யாதேனும் ஒரு சமயத்தில் கொஞ்சம் மனசாக்ஷியால் துன்பப் படுத்தப்படுத லியற்கை யாதலால், குடிலனும், பின் வருமாறு யோசிக்கத் தொடங்கினன்:—

"வஞ்சனையாற்பெறும் வாழ்வீதென்ன!
நஞ்சுபோற்றனது நெஞ்சங் கொதிக்கக்
கனவிலும் நனவிலும் நினைவுகள் பலவெழத்
தன்னுளே பன்முறை சாவடைந்தடைந்து
பிறர்பொருள் வெளவும் பேதையிற்பேதை
யெறிகட லுலகில் இலையிலை."

இவ்வெண்ணம்கார்காலத்து நள்ளிரவிலுண்டாகும் மின்னலுக்குச் சமானமேயொழிய வேறில்லை; உடனே வழக்கமாயுள்ள பேராசையால் மூடப்பட்டது.

சுந்தரமுனிவர் சில சடங்குகளின் பொருட்டென்று அரண்மனைக்குள்ளுள்ள ஓர் அறையின் திறவுகோலைப் பெற்றிருந்தாரென்று கூறினோம். அது, மெய்யாக, அபாயகாலத்தில் மனோன்மணி தப்பிக்கொள்ளும் பொருட்டு, அரண்மனைக் குள்ளிருந்து கோட்டைக்கு வெளியே போவதற்கு ஓர் நிலவறை தோண்டும் பொருட்டுத்தான். நடராஜனும் சில சிஷியர்களும் அவ் வழி தோண்டி வந்தார்கள். நடராஜன், ஊர்ப்புறத்து ஒருபக்கத்தில்,

"எவ்வினையோர்க்கும் இம்மையில் தம்மை
யியக்குதற் கின்பம் பயக்குமோ நிலக்கு
வேண்டும். உயிர்க்கது தூண்டுகோலாம்."

என்கிற நியாயத்துக்கு உதாரணமாகத் தன் மனத்தின்கண்

"துன்றராக்
கவ்வியமுழுமதி காட்சியிற் செவ்விதாம்
பின்னியகூந்தற்பேதை†"

யாகிய வாணியின் இளமுகம் நின்று யாவற்றையும் இயற்றுவித்தலையும், சிறு புல்லும் தன் 'சிறுரை' க்குறிப்பொடு பலவிடங்களுக்கு மனுப்புவதையும், வாய்க்கால் "காலத்தச்சன் கட்டிடுமலைக்கு" யாவற்றையும் ஈர்த்துச் செல்வதையும், நாங்கூழ்ப் புழுவின் செய்கைகளையும் பற்றிச் சிறந்த இயற்கை சாஸ்திரப் பயிற்சியுடன் யோசித்துக் கொண்டிருக்கையில், சேரதேசத்துப் படைகள் யுத்த சங்கீதத்துடன் வந்து சேர்ந்தன. நடராஜன், போர்க்கோலத்தை யறிந்து படைசென்றபின், சில உழவருடன் பேசிக்கொண்டிருந்தான். இச்சம்பாஷணையில், குடிலன்பேரில் யாவருக்குமுள்ள வெறுப்பும், மனோன்மணி பேரிலுள்ள அன்பும் ஜனங்களின் அதிருப்தியும் வெளிப்படுகின்றன.

மூன்றும்களம் கன்னிமாடத்தில். காலம் யாமம். மனோன்மணி விரகதாபத்தால் தூக்கமற்று வருந்துகிறாள். வாணிக்கோ அப்படி வருந்துவது "வழக்கம்." கழல் விளையாடுங் காலத்தில் மனோன்மணியிடத்திருந்த உற்சாகமெல்லாம் இப்பொழுது போய்விட்டது. மனோன்மணியும் வாணியும் நிலா முற்றத்தில் வீற்றிருக்கும்பொழுது, மனோன்மணி தன் விசனத்தை மறக்கும் பொருட்டு வாணியைப் பாடச் சொல்ல, அவள் "சிவகாமி சரிதை"யைப் பாடினாள். இச்சரிதை கும்மியடிப்பதற்குத் தக்க குறள் வெண்செந்துறையிற் பாடப்பட்டிருப்பதால், நம் மாதர்களெல்லாம் இதைப் பாராமற் கற்றுக்கொள்ளலாம். உதாரணமாக:

"சிவகாமி யானுனது சிதம்பரனே"என்னச்
செப்புமுன மிருவருமற் றோருருவ மானார்!
எவர்தாமுன் னணைந்தனரென் றிதுகாறு மறியோம்
இருவருமொன் றாயினரென் றேயறையுஞ் சுருதி"
—(48)

இச்சரிதை யெவ்வளவு இனிமையா யிருந்தபோதிலும் மனோன்மணிக்கு அதிக விசனத்தையே யுண்டுபண்ணிற்று. பிற்பாடு இருவரும் நடராஜனைப் பற்றிப் பேசுகையில், மனோன்மணி வாணியின் மனதைத் தேற்றுகிறாள்.

இக்காலத்தில் மனோன்மணியின் கல்வித்தேர்ச்சி வெளிப்படுகிறது. சுந்தர முனிவரிடம் அவள் அதிகமாய்க் கற்றிருக்கல் வேண்டும். அன்பின் நிலைமை நம்பலென்று தாபிப்பது மன்

* Compare: 'Julius Caesar: Act III, Sc. 1.'

† Compare:
"கமையினுடிரு முகத்தயல் கதுப்புறக் கவ்விச்
சுமையுடைக்கற்றை நிலத்திடைக் கிடந்ததூமதியை
யமையவாயிற்பெய் துமிழ்கின்ற வயிலெயிற் றரவிற்
குமையுறத்திரண் டொருசடை யாகிய குழலாம்"
கம்பர்

றி, நம்பலின் குணத்தைப்பற்றிச் சொல்லுகிருள்:—

"தெளிந்தவைகொண்டு தெளிதற் கரியவை
யுளந்தனினம்பி யுறுதியாய்ப் பிடித்துச்
சிறிதுசிறிது தன்னறிவினை வளர்த்தே
யனுபவவழியா யறிவதை, அந்தோ!
'அனுமானநியா லாய்ந்தறிந் திடுவோம்,
அலதெனிலில்லை யெனவயிர்ப்போம்' எனத்திரி
வாதிய ரன்பொரு போதுமே யறியார்"

யாதேனுமொன்று விசேஷமாய் (முக்கியமாய் அபாயம்)நேரிடுமுன்னமே குறிகள் தோற்றுவதாகச் சொல்வதுண்டு. இது'ஷேக்ஸ்பியர்'என்னும் கவிச் சக்கரவர்த்தியால் அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது. இராமாயணத்திலும் காணலாம். பின்வரும் அபாயங்களுக்கு முற்குறியாக மனோன்மணியின் உடல் புளகாங்கிதமாய் நடுங்கிற்று. மனோன்மணி சேனையின் அரவத்தைக் கேட்டவுடன் அதைப்பற்றி விசாரித்துக்கொண்டே வாணியுடன் உள்ளே சென்ருள்.

மூன்றும் அங்கம் நாலாம்களம் சுந்தரமுனிவர்ஆசிரமத்தில். அக்களத்தில் நிலவறைவேலை முடிந்தாய்விட்டதென்று அறிகிறோம். நடக்கும் வேதாந்த சித்தாந்த சம்பாஷணைகளை, சுந்தரமுனிவர் உத்தரவின்படி "ஓயாப்பேச்சு" என்று விடுத்தோம்.

அ. மாதவய்யர், B. A.

# நமது முன்னோர்களுடைய நிலைமையும் நோக்கமும்

ஸ்ரீராமபிரான் திருக்கலியாணத்துக்கு முன்பாக மிதிலாபட்டணத்தில் பவனிவரும்பொழுது,

'தோள்கண்டார் தோளேகண்டார்
தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார்,
தடக்கைகண் டாருமஃதே'

என்று கம்பர் அலங்கரித்துப்பாடியபடி அந்த மகாபுருஷனுடையதோள்களைக்கண்டவர்கள் அவைகளுடைய அழகிலேயே மயங்கிவேருெரு அவயவத்தையும் பார்க்கக்கூடாமல் பிரமித்து நின்ருர்கள்: பாதத்தைக்கண்டவர்கள் பாதத்தைத்தவிர வேருென்றையும்பார்க்கக்கூடவில்லை; கையைக்கண்டார்கள் கையையேகண்டார்கள். அதுபோல் நமது பூர்வீகர்களுடைய வேத சாஸ்திர விஷயங்களைக் காண்பவர்களுக்கு அவர்களைப்பற்றிய மற்ற எதையும் பார்க்கக்கூடவில்லை; அவர்களுடைய ஆசாரங்களையும் சடங்குகளையும் கொள்கைகளையும் பற்றி விசாரிப்பவர்களுக்கு அவர்களைப்பற்றிய மற்ற விஷயங்களைக்கண்டறிவதற்குக்கூடவில்லை. இப்படியிருந்தும் அவர்களைப்புகழ்வதும் இகழ்வதும் வழக்கத்தில் வெகு சாதாரணமாயிருக்கிறது. பிறவிக்குருடர் சிலர் யானையைப்பார்க்கச் சென்றதில் அதன் காதைத்தடவிப் பார்த்தவன் யானை முறம்போலிருக்கிறதென்றும், வாலைத்தடவினவன் யானை துடைப்பம்போலிருக்கிறதென்றும், அதன்காலைத்தடவிப்பார்த்தவன் யானை உலக்கைபோலிருக்கிறதென்றும், ஒவ்வொருவனும் ஒவ்வொரு விதமாகத் தீர்மானம் செய்துகொண்டது போல் சிலர் நமது முன்னோர்கள் நாகரீகமற்ற மிருகஜாதியார் என்றும், சிலர் அவர்கள் சாஸ்திரப்பயிற்சியற்ற மூடர்களென்றும், மற்றும்சிலர் அவர்கள் தெய்வம் இன்னதென்ற ஞானமில்லாமல் கேவலம் ஒரு துடைப்பத்தைக் கூட தெய்வமாகக் கொண்டாடிப் பூஜைசெய்தார்களென்றும், பலவாறுகத்தங்கள் மனம்போனபடி யெல்லாம் வர்ணித்திருக்கிருர்கள். ஆனல் அவர்களுடைய யதார்த்த நிலைமையை சரித்திரம் என்ற தூரதிருஷ்டிக்கண்ணாடியைக்கொண்டு பரிசோதிக்க வேண்டுமென்பது சிறிது நாளைக்கு முன் திருவனந்தபுரத்தில், எம். ஏ. பட்டம் தரித்த ராஜஸ்ரீசுந்தரராம அய்யர் அவர்கள் செய்த உபந்நியாசத்தின் மூலமாக செவ்வையாய்விளங்கும். அவர்கள் சொல்லுவதை அந்த உபந்நியாசத்தை இங்கிலீஷில் படித்திராத பலருக்கும் விளங்கும்படி சுருக்கமாகச்சொல்லுவோம்.

அனேக ஆயிரவருஷங்களுக்கு முன்னமேயே நமக்குள் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற நான்கு பிரதமவருணங்களும் ஏற்பட்டன. அவற்றுள் பிராமணர்களாவது ருக், யஜுர்,ஸாமம்,அதர்வணம் என்ற நான்குவேதங்களையும் முறைப்படி பாராயணம் செய்து அவைகளில் நியமித்தபடி இந்திரன் வாயுமுதலான தேவதைகளைநோக்கியாகம், எக்கியம் முதலியவைகளை நடத்திவந்த அத்திரி, பிருஹு, காசிபர், வசிஷ்டர் முதலான இருஷிகளும் அவர்களுடைய வம்சத்தர்களும் அவர்களுடையசிஷ்யவர்க்கங்களுமாம். க்ஷத்திரியராவது ராஜ்யத்தைப் பகைவர் கைக்கொள்ளாதபடி பாதுகாத்து குடிகளுக்கு க்ஷேமத்தைக் கொடுத்து ராஜ்யபரிபாலனம் பண்ணிவந்த ராஜாக்கள். வைசியர் வியாபாரம்செய்தவர்கள். பயிரிட்டு ஜீவனம் செய்தவர்கள் சூத்திரர்கள். இப்படி நான்கு பிரிவுகளாக ஏற்பட்டாலும் தொழிலினல் ஜாதியாக இருந்ததே தவிர பிறப்பினல் இல்லை. பிராமணனுடைய புத்திரனனுலும் வேதபாராயணம் செ

ய்யாதவன் பிராமணனல்ல; சூத்திரனுக்குப் பிறந்தாலும் வேதபாராயணம் செய்தால் பிராமணன் என்று இப்படி ஏற்பட்டிருந்தது. இப்பொழுதிருக்கிற ஜாதி வைராக்கியம் அப்பொழுது கிடையாது. ஜனங்கள் அன்னியோன்னியமாய் ஜாதிவைராக்கியம் மதவைராக்கியம் சற்று மில்லாமல் ஒருமித்து வாழ்ந்தார்கள். பிராமணன் என்ற இறுமாப்பாவது சூத்திரன் என்ற அவமானமாவது கிடையாது. எவர்களும் தங்கள் தங்களுக்கு இஷ்டமானதொழிலைச் செய்யலாம். ராஜ்யத்தில் க்ஷேமம் பெருகிற்று. அரசர்கள்

'வையகமுழுதும் வறிஞன்ஓப்புமோர்
செய்யெனக்காத்து'

என்றபடி ஒருஏழைக்குடியானவன் தன்னுடைய அரைக்காணி நிலத்தை எவ்வளவு அன்புவைத்துப் பாடுபட்டுக் கவலையுடன் காத்துவருவானோ அதுபோல் குடிகளுடைய சாஸ்வத க்ஷேமத்தைக்கருதி நியாயமான வரியைவசூலித்து அன்புடன் அவர்களைப் பாதுகாத்துவந்தார்கள். வைசியன் வயதுவந்தவுடன் வியாபாரஞ்செய்யத் தொடங்குவான். சூத்திரன் மகன் பயிரிடப்புகுவான். இப்படி ஒவ்வொருவனும் தன்னுடைய முன்னோர்கள் பரம்பரையாகச் செய்துவந்த தொழிலை தானும் செய்வதில் அதிக நன்மையுண்டு. உதாரணமாக ஒரு செட்டிப்பையன் வியாபார நுட்பங்களை யறிவதுபோல் ஒரு பிராமணப் பையனறிய முடியாது. இங்கிலாந்து முதலிய தேசங்களிலோ இப்படியில்லை. இன்றைக்கு ஒருவன் அரிவாளையெடுத்துப் பயிரறுப்பான், நாளைக்குஒருகடை வாங்கிக்கொண்டு வியாபாரம்பண்ணுவான், மறுநாள் கத்தியெடுத்து க்ஷவரஞ்செய்வான். ஒரு வேலையிலும் நிலையாய் நில்லாமல் என்றைக்கு எந்தத்தொழிலில் அதிகவரும்படி வருமென்று நினைக்கிறானோ அதற்கு ஓடித்திரிவான். இதனால் ஓய் வொழிவில்லாத சஞ்சலமும், அதிர்பதியும் உண்டாவதுமன்றி பணக்காரனிடத்துப் பொறாமையும், ஒருதேசத்திலுள்ள திரவியமனைத்தையும் எல்லாரும் பொதுவாய் அனுபவிக்கவேண்டுமென்ற துராசையும் இன்னும் அனேக தீங்குகளும் நேரிடுகின்றன. இப்படிப்பட்ட தீங்குகளுக்கு நமது முன்னோர்களுடைய சமூக ஸ்திதியில் இடம் கிடையாது. ஆனால் நஷ்டமடைந்தாலும் ஒருவன் தன் ஜாதித்தொழிலையே செய்யவேண்டுமென்ற நிர்ப்பந்தமான கட்டாயம் கிடையாது. மேலும் "பணம்! பணம்! பணம்!" என்று பணத்தையே பெண்டாகவும் பிள்ளையாகவும் தெய்வமாகவும் பாவித்துப் பேய் பிடித்ததுபோல் ஆங்கிலேயர்கள் திரிகிறமாதிரி நம்மவர்கள் திரியவில்லை. கண்ணியமான காலட்சேபத்திற்குப் போதுமான திரவியத்தைக் கொண்டு திருப்தியடைந்து பகவானை நோக்கி யாகயக்யாதிகளை வழுவாமல் நிறைவேற்றுவதையே பெரியபாக்கியமாக அவர்கள் எண்ணியிருந்தார்கள்.

ஆனால் இப்படிப்பட்ட அபரிமிதமானபாக்கியத்தை அவர்கள் நெடுநாள் அனுபவிக்கக்கூடாமல்தொழிலினால் ஜாதியாயிருந்ததுபோய்ப் பிறப்பினால் ஜாதியென்று ஏற்பட்டது. இன்னும் பிராமணர்களா, க்ஷத்திரியர்களா யார் உயர்ந்தசெல்வத்திற்கும் அந்தஸ்துக்கும் பாத்திரர்கள் என்ற போட்டி உண்டாயிற்று. வசிஷ்டருக்கும் விஸ்வாமித்திரருக்கும் நடந்த போர் இதையே குறிக்கிறது. பிராமணர்களுடைய வல்லமை மேன்மேலும் அதிகரித்தது. பரசுராமர் க்ஷத்திரியரைக் கருவறுத்து விட்டு காஸிபருக்குப் பூமியைத் தானம் செய்துவிட்டார். மறுபடி இவரை இராமர் ஜயித்த பிறகு க்ஷத்திரியருடைய வல்லமை நிலைபெற்றது. ஆனால் அதிபராக்கிரமசாலியாகிய இராமர்கூடச் சம்புகன்என்ற சூத்திரன் யாகம்செய்ய எத்தனித்ததற்காக அவனைக் கொல்லவேண்டுமென்று பிராமணர்கள் பலவர்தம் செய்ய அவர்களுடைய பிடிவாதத்தைத் தடுக்கமாட்டாமல் தன்மனச்சாட்சிக்கு முற்றும் விரோதமாக அநியாயமாய்ச் சம்புகனைக்கொல்லநேரிட்டது. இவ்வாறு ஜாதிவைராக்கியமும் போட்டியும் ஏற்படவே, பொருளாசையும் அதிகார ஆசையும் ராஜ்ய ஆசையும் அதிகரித்தது. இந்தத் துராசையே அக்காலத்திருந்த ஐம்பத்தாறு தேசங்களையும் ஒரேகலக்காய்க் கலக்கி அனேக லட்சம் ஜனங்களுடைய மரணத்திற்கு இடமாயிருந்த மகாபாரத யுத்தத்திற்குக் காரணமாயிருந்தது.

இவ்விதம் நமது முன்னோர்கள் கடவுளை மறந்து உலகவாழ்க்கையை விரும்பி நிலைபெற்ற செல்வத்தையும் அதிகாரத்தையும் நிலையென மயங்கி ஆசைவலையிலசப்பட்டு அந்தகாரத்தில் மூழ்கவிருந்த தருணத்தில் நமது ஜாதியார் அனைவரும் பலபல காலத்தில் பண்ணிய புண்ணியமெல்லாம் ஒருமித்துத் திரண்டு உருவெடுத்து வந்ததுபோல், ஜகத்குருவென்றும், ஆபத்பாந்தவரென்றும், அநாதிரட்சகர் என்றும், பல பல திருநாமங்களால் இந்துக்களாகிய நாம் ஒவ்வொருவரும் அழைத்து நினைத்து துதித்துக்கொண்டாடும் மகாபுருஷராகிய கிருஷ்ணபகவான் நமதுநாட்டில்திருவவதாரம் செய்தருளினார். நம்முடைய நாட்டையும் நம்முடைய செல்வத்தையும் நம்முடைய பெருமையையும் கீர்த்தியையும் இந்த உலகத்தில் நமக்கு உள்ளனவென்று நினைக்குமற்றெல்லாவற்றையும் அந்நியர் அபகரித்து விட்டாலும், 'கிருஷணன் எங்கள் கிருஷ்ணன், பகவத்கீதை எங்களுடைய பகவத்கீதை' என்று நாம் சொல்லக்கூடும்வரையில் நமக்கு யார்தான் நிகராவார்? உலகத்தில் அவதரித்த மகா புருஷர்கள் எல்லோரிலும் கிருஷ்ணனே சி

தவர், அவரை நினைக்குங்கால் நமக்கு நம்மையறியா மல் ஆனந்தம் பெருகுகிறது. அவரிடத்தில் நமக்கு தெய்வத்தினிடத்தில் உள்ள பயபக்தி வணக்கமும், இஷ்டனிடத்துள்ள அன்பும் அபிமானமும் நேசமு ம் ஏககாலத்தில் ஜனிக்கின்றன. அவர் 'ஒருத்திமக னாய்ப் பிறந்து ஒருத்தி மகனாய் மறைந்து வளர்ந்த' திவ்யசரித்திரம் ஐந்துவயது பாலன் முதல் யாரும் அறிவார்கள். கிறிஸ்தவர்கள் தேவகுமாரன் என்று கொண்டாடும் யேசுவுக்கு ராஜதந்திரம் யாதொன் றும் தெரியாது. கிருஷ்ணனே உயர் வொப்பிலாத ராஜதந்திரி; பாரதப் போரைத்தடுக்க அவர்முயன்ற தும், துஷ்டதுரியோதனாதிகள் சமாதானத்துக்கு இட ங்கொடுக்காததால் சத்தியத்திற்குப் பயந்து சன்மார் க்கத்தையே தெய்வமெனக்கொண்ட பாண்டவர்களு க்கு அவர் சகாயமளித்ததும் யாவருக்கும் தெரிந்த விஷயம். யுத்தகளத்தில் அவர் அர்ச்சுனனுக்கு உப தேசித்தருளிய 'பகவத்கீதை'யினுடைய பெருமை யை எடுத்துச்சொல்லவேண்டிய அவசியமே யில்லை, ஐரோப்பியர்கள் கூடஅதை சிரசின்மேல் வைத்துக் கொண்டாடத் தலைப்பட்டு விட்டார்கள். ஐரோப் பாகண்டத்திலுள்ள ஒவ்வொரு பாஷையிலும் அது மொழிபெயர்க்கப்பட்டு வழங்கி வருகிறது. இன் னும் சொற்பகாலத்தில் உலகத்திலுள்ள தத்துவ கிர ந்தங்களில் உன்னத ஸ்தானத்தை அது அடையுமெ ன்பதற்கு சற்றேனும்ஐயமில்லை. அஞ்ஞானவிருளில் மூழ்கவிருந்த நம்மைத் தக்க தருணத்தில் கைகொடு த்துத் தப்புவித்த பகவத்கீதைக்கு நாம் நம்முடைய வந்தனத்தை வார்த்தைகளால் வெளியிடுதல் சாத் தியமில்லை. உலகத்தின் யதார்த்த நிலைமையை ஜன ங்கள் அறியத்தொடங்கினார்கள். தங்கள் தங்களு டைய கடமைகளை கைம்மாறு எதிர்பாராமல் செய் பவர்களுக்குக் கடவுளுடைய அனுக்கிரகம் நிச் சயம் என்றறிந்தார்கள். உலகவாழ்க்கை அநிச்சிய மாயிருந்தாலும் உள்ளவரையில் சத்கர்மங்களையே செய்யவேண்டுமென்று தெரிந்து கொண்டார்கள். வேதாந்த விசாரணை மேன்மேலும் பரவிற்று. இப் படிக் கொஞ்சகாலம் கழிந்தபின் சூரியன் அஸ்த மித்தபிறகு சிறிதுநேரம் வெளிச்சமாயிருந்து பிறகு இருள்வந்து மூடுவதுபோல் கௌதமரால் ஸ்தாபிக் கப்பட்ட பௌத்தமதம் தேசத்தைக் கவர்ந்துகொ ண்டது. பிரபஞ்சம் முழுவதும் மாயை. அதில் உயிர் வாழ்வது பாவம். ஒவ்வொருவரும் ஆசையை நிக் கிரஹம்பண்ணி, வரும் துன்பத்தையெல்லாம் சஹித் து, ஜீவப்பிராணிகளுக்கு சற்றும் ஹிம்சை செய்யா மல் காடுகளில் தனியே காலங்கழித்து இந்தஉயிரை விட்டுச்சுத்தவெளியாயுள்ள நிர்வாணம் என்ற பரகதி யை அடையவேண்டுமென்பதே பௌத்தருடைய கொள்கை.எல்லாப்பக்தியும்வீண். ஆத்மாகூடச்சாஸ் வதமில்லை. சுவாமியேகிடையாது என்பதும் அந்தப் பௌத்தமதத்தின் கொள்கை. இந்தமதம் நமது தே சம்முழுவதும் அதிக சீக்கிரமாகப் பரவியதற்குக் காரணம்:

"சாதியிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் உயர்ந்தோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ளபடி"

என்பதற்கேற்ப பிறப்பினால் பிராமணன் என்றும் சூத்திரனென்றும் இந்தவிதமான ஜாதிபேதங்கள் கிடையா: பௌத்தசந்நியாசிகளாகிய பிக்ஷுக்களுக்கும் ஸ்ரமணர்களையும் போன்ற உயர்ந்த ஆத்மாக்களுக் குக் கொடுப்பவர்கள்தான் உயர்ந்தவர்கள்: அப்படிப் பாத்திரமறிந்து கொடாத மற்றோரெல்லாம் இழி குலத்தவர்: என்று கௌதமர் கட்டளை யிட்டபடி யால் பிராமணர்களொழிந்த மற்றைய ஜாதியார்க ளெல்லாம் பௌத்தமதத்தை அநுசரிக்கத்தொடங் கினார்கள். சேர சோழபாண்டியர் முதலிய தென்னி ந்தியாவிலுள்ள அரசர்கள்கூடத்தங்கள் சுயமதத்தை விட்டுப்புதிய மதத்தைக் கடைப்பிடித்தார்கள்.

இப்படி விஷம்ஏறுவதுபோல் நாஸ்திகமதமானது பரவவே தங்களுடைய மத க்ஷேமத்தை நாடிய சிலருக்குண்டான கவலை இவ்வளவுஅவ்வளவுஇல்லை. அந்த விஷத்தை இறக்குவதற்குத் திடீரென்று புறப் பட்ட ஒரு பெரிய மந்திரவாதிபோல் கேரளதேசத் தில் ஒரு சிறுகுக்கிராமத்தில் மாதர் சிகாமணியாகிய ஆர்யாம்பாளுடையதிவ்யமங்களகர்ப்பத்தில்குறைந் தது ஆயிரத்திருநூறுவருஷங்களுக்குமுன் பௌத்த மதத்தைத் துரத்தித் துரத்திக், கண்ட கண்ட இட மெல்லாம் எதிர்த்துப் போர்செய்து தலையெடுக்க வொட்டாமல் கண்டனம் செய்த புண்ணிய புருஷரா கிய ஸ்ரீ சங்கராசாரியார் நல்ல முகூர்த்தத்தில் அவ தரித்தார். அவருடைய வேதாந்த விசாரணையும், சொல்வன்மையும், மனோதிடமும், ஊக்கமும், உல கத்தாருக்கு உயிரினும்உயிராகிய உண்மைமதத்தைத் தந்து இரட்சிக்க வேண்டுமென்ற பெருந்தன்மையா ன ஆசையும் மனிதர்களிடத்தில் அவர் வைத்திருந்த பச்சாத்தாபமும், அன்பும், விடாமுயற்சியும், அதிக அற்புதமாயிருந்தது. இங்கிலீஷ் பயிற்சிதான் நமக்கு உயிரைத்தந்து ஊக்கத்தைத் தந்ததென்று நாம்பெ ருமைபாராட்டிக் கொள்ளுகிறோம். பி. ஏ., எம். ஏ., முதலிய பெரிய பரீட்சைகளை நமதுசர்வகலாசாலைக ளில் பயின்று, தேர்ந்து பெரிய பட்டங்களை வஹி த்து வருகிறவர்களில் யாருக்குத் தான் ஸ்ரீ உலக குருவாகிய சங்கராசாரியாருக்கிருந்த ஊக்கத்தில்பத் தில் ஒருபங்கு இருக்கிறது பாருங்கள்! அவர்காலத் தில் ரயில்கிடையாது. ஆகாயமார்க்கமாய்ப் போகும் புகைப்பல்லக்காகிய 'பாலூன்' அவர் காலத்தில் தெ ரியவேதெரியாது. அப்படியிருந்த அந்நாளில் ஹிமா

லயம் முதல் கன்னியாகுமரி முனைவரை சஞ்சரித்து, பௌத்தமத கண்டனம் செய்து, இந்துமத ஜயபேரிகை யடித்து, வெற்றிக்கொடி நாட்டி, சென்றவிடந் தோறும் ஆலயப்பிரதிஷ்டை செய்து, ராஜாக்களை யெல்லாம் தன் வசப்படுத்தி தான் இட்டதுசெய்யும்படி ஏவல் கொண்ட மகானுபாவருடைய பராக்கிரமத்தைப்பற்றி நாம் என்ன சொல்லக்கூடும்? அவருடைய பராக்கிரமம் இவ்வளவு அற்புதமாயிருக்குமானால் அஜ்ஞத்தடைய புத்திநுட்பமும் ஞானதிருஷ்டியுஜ்ஜயத்திலும் அற்புதம். பௌத்தமதம் பரவியிருந்ததையும் அதில் ஜனங்களுக்கிருந்த பற்றையும், 'காதங்கள் கோடி கடைசென்று காணுநயனங்கள்' என்றபடி நெடுந்தூரம் கூசாமல் கடைக்கண்ணினாலே ஒரு பெரிய பருந்தானது பார்ப்பதுபோல் ஞானக்கண்களாலளந்து வியாதிக்குத்தக்க ஔஷதத்தைக் கொடுக்கத்தொடங்கினர். ஒருகாலத்தில் ஒரு குடியானவன் நெருப்பில் பழுக்கக்காய்ச்சி யிருந்த கரண்டியை ஜலத்தில் நனைத்தான். நனைத்தவுடன் அதன் உஷ்ணம் தணிந்து விட்டது. அதைப்பார்த்துஅவன் ஆச்சரியமடைந்திருந்தான். சிலநாள் சென்றபின் அவனுக்குக்கொடியஜுரம் வந்தது. வந்தவுடன் இரும்பிலிருந்த உஷ்ணம் ஜலத்தில் நனைத்தவுடன் தணிந்தது போல் நம்முடைய சரீர உஷ்ணமும் தணியுமென்று அந்த மதியூகி அனுமானித்து ஒருதொட்டியில் ஜலத்தை நிரப்பி அதில்போய் உட்கார்ந்து கொண்டான். சிறிது நேரத்திற்கு எல்லாம் சுரம்அதிகரித்து ஜன்னி தோஷங் கண்டு, ஐயோ! அவன் இறந்துபோனான். நமது தேசத்தில் பரவியிருந்த வியாதிக்கு ஸ்ரீ சங்கராசாரியார் வைத்தியம் பண்ணினது இந்தவிதமல்ல. இவ்வுலகத்திற் கப்பால் வெட்டவெளி நிர்வாணம் என்ற பௌத்த கொள்கையை மறுத்து, பரப்ரம்மதில் ஐக்கியந்தான் ஆத்மாவின் அந்தம் என்று ஸ்தாபித்தார். பிரபஞ்சம் மாயை என்று பௌத்தர் சொல்வதுமெய்தான்; ஆனல் நமதுகுடும்பத்துக்கும் பிறருக்கும் நாம் செய்யவேண்டிய கடமைகள் பலவுள; அவற்றைச் செய்யா விடில் பாவம் சம்பவிக்கும் என்று நாட்டினர். பௌத்தர்கள்சொல்லுவதுபோல உலகத்தைத்துறப்பது அவசியந்தான்; ஆனல் பிரமசாரி, கிருஹஸ்த ஆஸ்ரமங்களைக் கழித்த பிறகு தான் வானப்ரஸ்த, ஸந்நியாசி யாஸ்ரமங்களுக்குப் போக வேண்டுமென்று போதித்தார். பௌத்தர் சொல்வது போல் ஜாதிபேதம் எதார்த்தத்தில் இல்லையென்றாலும் இவ்வுலகத்துத் தொழில்கள் செவ்வையாய் நடந்தேறச் சிலஜாதிபேதங்கள் அவசியம்என்று ரூபிகரித்தார். இவ்வாறு ஜுரம் என்றால் சைத்யோபசாரம் செய் என்னுமல்பௌத்தர்களுடன்முற்றிலும் வேறுபடாமல் சிறிதுதூரம் சென்று சமாதானம் செய்வது போல் தொடங்கி ஜயத்தை யடைந்தார்.

ஸ்ரீசங்கராசாரியார் நமக்குச் செய்த மற்றொருபகாரத்தை நாம் எக்காலும் மறக்கவொண்ணாது. 'உப்புக்குவட்டின் மிசையிருந்துண்ணினும் இட்டுணாக்காலது கூறுதாம்' என்றபடி நமக்கு அருகில் எக்காலத்தும் இருந்த பகவத்கீதையை மறந்திருந்த நமக்கு அந்த மோக்ஷத்துக்குரிய திறவுகோலைப்பாஷ்யசஹிதமாய் அளித்த பரமாசாரியாருக்கு நாம்எப்பொழுதும் வந்தனமுள்ளவர்களா யிருக்க வேண்டும்.

ஸ்ரீ சங்கராசாரியார் இவ்வாறு பௌத்த மதத்தை முறியடித்தபிறகு ஸ்ரீ இராமானுஜர் அவதரித்தார். பௌத்தமதத்தைச்சின்னபின்னஞ்செய்து தத்தளிக்கச்செய்தவர் சங்கரர்; அதைஇருந்த சுவடுகூட இன்றி அழித்தவர் ராமானுஜர். கடவுளுக்குமுன்னம் எல்லா ஜாதியாரும் ஒன்றுதான் என்றுசங்கரர்சொன்னதை இராமானுஜர் வற்புறுத்திக்கூறினர். அவர் வார்த்தையால் சொன்னதை இவர் காரியத்தால் சாதித்தார். ஸ்ரீஇராமானுஜர் தனக்கு வேததத்துவத்தை உபதேசித்தருளிய தன்னுடைய குரு அந்த இரஹஸியத்தை யாருக்கும் வெளியிடக்கூடாதென்று கண்டிப்பாய் ஆஞ்ஞாபித்திருந்தும் திருவரங்கம் பெரியகோயில் கோபுரத்தின் மீதேறி ஜனங்களை நோக்கி "பிரியநேசர்களே! எனக்கு உபதேசிக்கப்பட்டிருக்கும்இரஹசியத்தை உங்களுக்கு வெளியிடத்துணிந்து தீர்மானித்துவிட்டேன். உங்களுக்காக கொரேமான—'ஏகுக ஏகுகமீளாதேதுக' என்றபடி—என்றும்மீட்சியில்லாத ரௌரவாதி நரகத்திற்குக்கூட ஆளாகத்தயாராயிருக்கிறேன்" என்றுகூறிய அன்புநிறைந்த ஆனந்த வாசகம் எல்லாருக்கும் தெரிந்ததே. இந்த ஆசாரியர்கள் காலத்திலேயேதமிழ்நாட்டில் அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர் என்ற 'சைவநெறி தழைப்ப' அவதரித்த சமய குரவர்கள் பௌத்தசமயவாசனை கூடப்படாதபடி அப்பூண்டை வேரறுத்துவிட்டார்கள்.

இவ்விதம் தெய்வத்தன்மைபெற்ற மனிதர்கள் பலர்கூடி மத்தியில் நேரிட்ட இடையூறுகளைவிலக்கி நமது முன்னோர்கள் முற்காலத்தனுபவித்த பாக்கியத்தை நிலைநிறுத்தியபிறகு நம்முடைய தேசத்தில் பலமானராஜ்யங்கள் ஏற்பட்டு க்ஷேமத்தை யடைந்திருக்கலாம். உண்மையாகவே விஜயநகரம் முதலிய இடங்களில் தக்க அரசாட்சிகள் ஏற்பட்டன. ஆனல் கடவுள் விதித்தது வேறுவிதம். கோரான் அல்லதுகத்தி என்று கதறிக்கொண்டுவந்த மிலேச்சர்களாகிய மகம்மதியர் கையிலகப்பட்டு நமது தேசம் தத்தளித்தது. அவர்களுடைய கொடுமை கழிந்து அன்பாயும் ஆதரவாயும் அரசுபுரியும் ஆங்கிலேயர்கள் நம்மை விடுவித்தது நல்லகாலமென்றே நினைக்கவேண்டும்.

ராஜ்யத்தில் க்ஷேமமும் சமாதானமும் பரவியிருக்கும்போதே நாம் நமக்கு வேண்டிய சீர்திருத்தங்

கள் செய்து கொள்ளவேண்டியதென்பது யதார்த்தமென்றாலும் கடவுளை மறந்து தெய்வபக்தியைத் துறந்து பணத்தையேபெரிதெனக்கொண்டாடும்ஆங்கிலேயர்களுடையநாகரீகத்தைக்கண்டு மகிழ்ந்து தீபத்தைப்பழமென்றெண்ணிக்குபீரென்று பாய்ந்து அநியாயமாய் இறந்துபோகும் அந்துப்பூச்சிகளைப்போல் பதறாமல்நிதானித்து கிருஷ்ணபகவான் நமக்குத்திருவாய்மலர்ந்தருளியிருக்கும் வேதபாக்கியத்தை சிரசின்மேல் வைத்து வணக்கத்துடன் கிடையாச்செல்வமெனமதித்து,அன்பாகமுத்தமிட்டு நேசித்துப்பாராயணம்பண்ணி, லோககுருவாகிய சங்கரர் பௌத்த மதத்தை நீக்குவதற்கு எவ்விதமான தந்திரங்கள் உபயோகித்தனரோ, அவ்வித தந்திரங்களைக் கைக்கொண்டு சாவதானமாய் வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென்பதை நாம் எல்லாரும் மனதில் வைக்கவேண்டும்.

பி. ஆர். இராஜமய்யர், B. A.,

---

## குடித்தனம் பண்ணுகிற மூன்று விதங்கள்.

---

முதலாவது வருநம்படிக்குள்பட்ட செலவுசெய்கிறது.

மாமாமலயகேது.—ஆனால் நீ கலியாணம் செய்துகொள்ளப்போகிறது நிச்சயந்தானா, தர்மசீலா?

தர்மசீலன்.—ஆம் மெய்தான் அய்யா.

மாமா மலயகேது.—கூழ் குடிக்கவா கலியாணம்?

தர்மசீலன்.—ஆம் அய்யா என்னால் அதற்குக்கூட சம்பாதிக்க முடியாவிட்டால் அன்னப்பாலைக் கொண்டேனும் சீவிப்பேன்.

மாமாமலயகேது.—உன்னோடுகூட பட்டினிகிடக்க சத்தியவதியும் சம்மதித்து விட்டாளோ?

தர்மசீலன்.—கூழ்குடித்தாலும் நாங்களிருவரும் சுகமடைந் திருக்கலாமென்று அவளை நம்பும்படி செய்திருக்கிறேன். எப்பொழுதும் என்னுடைய முயற்சி எங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதைக் கொடுக்கும்.

மாமா மலயகேது.—எப்பொழுதும் உன்னுடைய தொழிலில் முயற்சி செய்வதற்கு தகுந்ததேகசௌக்கியம் உனக்கிருக்குமென்பது என்ன நிச்சயம்?

தர்மசீலன்.—சரிதான். நான் அந்தவிஷயத்தைப் பற்றி நிச்சயமாய்ச் சொன்னால் அது மூடத்தனந்தான்.

மாமா.—அப்படியிருக்க நீ அதை உறுதியாய் நம்பினது போலும் காரியங்கள் செய்ய எத்தனிக்கிறாயே.

தர்மசீலன்.—நான் அப்படிச்செய்வது என்ன தப்பிதம்? எனக்கு பலமும் தேகசௌக்கியமுமிருக்கிறது. அவைதான் என்னுடைய பாக்கியம். அவை இப்பொழுதிருக்கின்றன. ஆகையால் அவைகளை என்னால் இயன்றமட்டும் நன்றாய் உபயோகப்படுத்தவேண்டும். நம்மிடத்திலிருக்கும் வஸ்துக்கள் எப்பொழுதும் நீடித்திருக்குமோ, இராதோ, என்ற சந்தேகத்தால் நம்முடைய முயற்சியைக்கைவிட்டு விட்டால், ஏன், செல்வமுடையவர்களுக்கும் இல்லாதவர்களுக்கும் என்னபேதம்? செல்வத்துக்கு வெகு சீக்கிரம் இறக்கை யுண்டாகி பறந்துபோய் விடுகிறது. நீர், நெருப்பு முதலானவைகளுக்கு இரையாகிறது. இவ்வுலகத்தில் எல்லாம் அநித்தியந்தான். ஆகையால் என்னுடைய ஸ்திதி அநேகருடைய ஸ்திதியைப்பார்க்கிலும் கெட்டதல்லவே.

மாமா.—அவை யாவை சொல்?

தர்மசீலன்.—அய்யா, முதலாவது, எனக்கு தேகசௌக்கிய மிருக்கிறது.இரண்டாவது,சுறுசுறுப்பிருக்கிறது. மேலும் என்னுடைய தொழிலோ கூடியவரையில் நல்ல சம்பாத்தியம் வரக்கூடியது தான். ஒருவைத்தியன் சாமர்த்திய முள்ளவனும், கவனமுள்ளவனு மிருந்தால் எப்பொழுதும் நோயாளிகள் அவனிடம் வருவார்கள். நான் மேற்சொல்லிய இரண்டு குணங்களையும் அநுசரிக்கக்கருதியிருக்கிறேன். இவைகளையெல்லாம் தவிர நாங்கள் மிகவும் செட்டாயிருந்து அதிக ஆசையில்லாமலிருப்பதினால் எப்பொழுதும் வருகிற வரும்படியைக் கொண்டே சுகமாய்க்குடித்தனம் பண்ணலாமென்று நம்புகிறோம். மேலும் சத்தியவதிக்கு விலையுயர்ந்த ஆடையாபரணங்களில் ஆசை யில்லையென்பது தங்களுக்கே தெரியுமே; ஆகையால்—

மாமா.—ஆகையால் நீ கலியாணம் செய்துகொள்வதைப்பற்றி தீர்மானித்து விட்டாய் போலிருக்கிறது. இனி இந்த சங்கதியைப்பற்றிஉன்னோடு பேசுவதில் பிரயோசன மில்லையே.

தர்மசீலன்.—தங்களுடைய சம்மதத்திற்காக மாத்திரந்தான் காத்துக்கொண்டிருக்கிறேன்.

மாமா.—சத்தியவதி சம்மதித்துவிட்டால் நானும்சம்மதித்ததுபோல் தானென்று உனக்கே தெரியுமே. சத்தியவதி உன்னோடு மிகவும் தரித்திர ஸ்திதியில் கூடியிருக்க சம்மதித்து விட்டாள் போலிருக்கிறது.

(உடனே சத்தியவதி தன்புன்சிரிப்பினால் தன்னுடைய சம்மதத்தை வெளியிட்டாள்.) நல்லது நான்

இனி வாக்குவாதம் செய்கிறதில்லை. ஆனால் உங்களுக்கு ஒரு சங்கதி சொல்லுகிறேன், கேளுங்கள். ஒருவனுக்கு உண்ண ஆகாரமும், குடிக்கத்தண்ணீரும், உட்கார நிழலும், உடுக்கவஸ்திரமும் வேண்டுமேதவிர மற்றவைகளெல்லாம் மிகுதிதான்.

(சத்தியவதி இதுவரையில் தலைகுனிந்து பின்னல் வேலை செய்துகொண்டிருந்தவள், தன்னுடைய மடியில் நூலைவைத்துவிட்டு ஆச்சரியத்துடனே தன்னுடைய மாமனை நிமிர்ந்து பார்த்தாள்.) ஓகோ! நான் சொல்லுவது சரியல்லவென்று நீ நினைக்கிறாப் போலிருக்கிறது, ஒருவனுக்கு அவசியமாய்வேண்டிய வஸ்துக்கள் வேறென்ன? சொல் பார்க்கலாம்.

சத்தியவதி.—நான் தர்மசீலனோடு கூடியிருக்கச் சம்மதித்த பொழுது, காட்டி லிருக்கும் மிருகங்களைப் போலவும், ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகளைப்போலவும் வசிக்கலாமென்று நினைக்கவே இல்லை. நம்மைச்சுற்றியிருக்கும் பிறர்களுடைய மாதிரியைப்பார்த்து நாமும் நம்முடைய குடித்தனத்தை நடத்தவேண்டும். இருந்தபோதிலும் எங்களுக்கு சீவனத்துக்கு வேண்டிய அவசியமான வஸ்துக்களைத் தவிர வேறுவஸ்துக்கள் வேண்டியதில்லையென்பது நிச்சயந்தான். மற்ற சுகங்களெல்லாம் எங்களுக்கு பரஸ்பர மிருக்கிற விசுவாசமே கொடுக்கும்.

தர்மசீலன்.—தன்நாயகியின் பேசுந்திறமையைப்பார்த்து அகமகிழ்ந்து சொல்லுகிறான்: "நானேஇப் படிப்பட்ட சத்தியவதியை அடைவதில் வெகு பாக்கியசாலியாவேன்."

மாமா.—பிறர்களைப்பார்த்து நம்முடைய குடித்தனத்தை நடத்துகிறதா! ஆகா! பிறர்கஞ்சியும் கூழும் குடித்து சீவனம் பண்ணினாலல்லவோ நாமும் அப்படிச்செய்யலாம். ஆனால் ஒருவரும் அப்படிச்செய்யக்காணோமே. எல்லோரும் குடிக்கக் கஞ்சியில்லாவிட்டாலும் செய்துகொள்ளுகிற டம்பத்தில் மட்டும் குறைவு பண்ணுகிறதில்லை. ஆகையால் நீயும் அவர்களைப்போலவே கொஞ்சம் வரும்படிக்கு அதிகமாகத்தானே செலவு செய்யவேண்டும்.

தர்மசீலன்.—அய்யா அப்படியல்ல. ஒருபொழுதும் வரும்படிக்கு மேலிட்ட செலவு செய்கிறதில்லையென்பதே எங்களுடைய உறுதியான சித்தாந்தம்.

மாமா.—ஆம். நீ அந்தத்தீர்மானத்தின்படியே நடக்கிறவரையில் உனக்கு யாதொரு குறைவும் வரமாட்டாது. ஆனால் கெட்ட விஷயங்களில் நம்முடைய புத்தி எவ்வளவு சீக்கிரம் செல்லுமென்பது உனக்கு இன்னும் தெரியாது. நான் சொல்லவேண்டிய புத்திமதிகள் இவ்வளவுதான். பெரும்பாலும் புத்திமதியைத்தவிர வேறொன்றும் கொடுக்கத் திறமையில்லாதவனுடைய வார்த்தைகள் அதிக பிரயோசனப் படமாட்டாது. நான் மிகவும் ஏழைதான். ஆனாலும் என்னைப் போன்ற பிரமசாரிக்கு ஆசைமட்டுந்தானே.

சத்தியவதி.—ஆம், மாமா, தங்களுக்கு கேவலம் அன்னவஸ்திரத்தைத் தவிர வேறொன்றிலும் இச்சையில்லையென்பது எனக்குத்தெரியும். அவைகளை வைத்துக்கொண்டு நெடுங்காலம் சுகமடைந்திருப்பீர்களாக. எங்களுக்கு எல்லாவித ஐசுவரியத்தைப்பார்க்கிலும் சிறந்த தங்களுடைய புத்திமதிகளை வெகுகாலம் போதித்து எங்கள்மீது பிரியம் வைத்திருப்பீர்களாக.

மேற்சொல்லிய சம்பாஷணை நடந்து இரண்டுவாரமாவதற்குள்ளாக தர்மசீலனும், சத்தியவதியும், கணவனும் மனைவியுமானார்கள். ஒருவருக்கொருவர் அந்நியோந்நியமாகவும், குடித்தன முறைமையில் சிறந்தவர்களாயும், இவர்க்கிணைவேறொருவரில்லை யென்று சொல்லும்படியாக சிலநாள் சுகமடைந்திருந்தார்கள். குடித்தனம் பண்ணுவதில் ஒரு பொழுதும் கடன் வாங்குகிறதில்லை யென்றே தீர்மானித்துக்கொண்டு ஜனநெருங்கிய ஒருதெருவில் அற்ப வாடகையுள்ள ஒரு வீட்டைத் திட்டஞ் செய்து கொண்டார்கள்.

அநேக வைத்தியர்கள் இளமைப்பருவத்தில் தங்களுடைய தொழிலை ஆரம்பிக்கும்பொழுது, வெகுகனவான்களுடைய ஒத்தாசையால் முன்னுக்கு வருவதுண்டு. அதுபோல தர்மசீலனுக்கு ஒத்தாசைசெய்ய ஒருவருமில்லை. அவன் பட்டணத்துக்கு வந்தது இதுதான்முதல்தடவை. வந்தவிடத்தில் மலையகேதுவின் மருமகளான சத்தியவதியைக்கண்டு அவளைக்கல்யாணம் செய்துகொள்ளவேண்டு மென்று ஆசைகொண்டு, பிறகு தன்மனைவியைக்காப்பாற்றும் பொருட்டு தன்னுடைய சம்பாத்தியத்தினின்றும் தான் சற்றேனும் வீணாய்ச்செலவிடாமல் அவளுக்கு வேண்டியவைகளை தன்னாலானமட்டும் தேடிவந்து கொடுத்து சுகமாயிருக்கலாமென்று நினைத்தான். ஆனால் இவர்கள் குடித்தனம் பண்ண ஆரம்பித்த பொழுது கையிலிருந்த பொருளோ, வேண்டிய சாமான்கள் வாங்கியான பிறகு, முதல்மூன்று மாதத்து வீட்டுவாடகை கொடுக்கவும், அவர்கள் வீட்டுத்தலைவாயிலில் கட்டியிருந்த "வைத்தியம் தர்மசீலன்" என்று நேர்மையாய் எழுதிய, ஒருபலகைக்குந்தான் காணும் போலிருந்தது. இப்படியிருக்க தர்மசீலன், நாள்முழுவதும் வீட்டைவிட்டு அசையாமல் காத்துக்கொண்டிருந்தபோதிலும் மேற்சொல்லிய பலகையைக் கண்டு ஒருவரேனும் உள்ளேநுழைகிற தில்லை.

இப்படி ஒருவாரம் பொறுமையுடனே காத்திருந்தும் பிரயோசன மில்லாததுகண்டு, அந்தப்பலகையில் "ஏழைகளுக்கு இனுமாகவைத்தியஞ்செய்வார்" என்ற வார்த்தைகளைச் சேர்க்கவேண்டியதாயிற்று. பின்னும் சிலநாள் சென்றபிறகு "மருந்து வாங்கப் பணமில்லாதவர்களுக்கு மருந்தும் இனும்" என்றவார்த்தைகளையும் சேர்க்கவேண்டியதாயிற்று. சில நாட்சென்றபின்பு அத்தெருவழி நடப்போரெல்லாம் பலகையிலெழுதி யிருந்ததை கவனிக்கத்தொடங்கி அநேகர் தர்மசீலனிடத்துக்கு வந்தார்கள்.

இவர்கள் சற்றேனும் தர்மசீலனுக்குபணங்கொடுக்கத்திறமையில்லாதிருந்த போதிலும், தர்மசீலன் தன் கையைவிட்டேனும் செலவுசெய்து, இவர்களை சௌக்கியப்படுத்தி புகழ்பெற்ருல், பிறகு தனக்கு ஐசுவரியமுள்ளவர்களிடத்திலிருந்து நல்ல வரும்படிவரும் என்று நினைத்து வைத்தியஞ்செய்யத்தொடங்கினுன். இப்படிக்கு ஸ்வயப் பிரயோசனத்தை விரும்பிச் செய்த தர்மமானது நாளாக, நாளாக, இவன்மனதிலேயே குடிகொண்டு தர்மசீலன் பிறர்க்கு நன்மை செய்வதிலேயே கருத்துள்ளவனுனுன். தன்னைச் சுற்றி யிருக்கும் தரித்திரர்களுடைய ஸ்திதியைப் பார்க்கும்பொழுது தன்னுடைய வறுமையை மறந்துவிட்டான்.

ஒருநாள்தர்மசீலன் தன்மனைவியிடத்தில் நோயால் வருந்தும் ஒரு ஸ்திரீயின் நிலைமையையும் அவளுடைய குழந்தைகள் சோற்றுக்கழுவதையும் பற்றிச் சொன்னபொழுது, சத்தியவதி தன்கணவனுடன் சென்று அந்த ஸ்திரீயின் குடிசைக்குள் புகுந்தாள். சத்தியவதி தன்கையிலிருந்த பொருளையெல்லாம் இதற்குள் குடித்தனத்தில் செலவிட்டுவிட்டபோதிலும், நன்மைசெய்யப்போகிறேமென்னும் சந்தோஷத்தினுல் வருகிற மாதத்துக்கு வீட்டு வாடகையை எப்படி கொடுக்கிறது என்ற தன் கவலைகளையெல்லாம் மறந்துவிட்டாள். தன்னுடைய நிலைமை யிப்படி யிருந்தபோதிலும் நன்மை செய்வதில் பின்னிடாமலே ஒருநாள் சத்தியவதி சிலஉணவுகளை எடுத்துக்கொண்டு நோயால் வருந்தும் மேற்சொல்லிய ஸ்திரீயின் குடிசைக்குச் சென்று அவள்படுத்திருந்த அறைக்குள் புகுந்தாள். குழந்தைகளெல்லாம்இவளை சூழ்ந்து கொண்டன. ஆனுல் அவ்விடத்தில்ஒருஆச்சரியம் தோன்றிற்று.

அது யாதெனில் நோயாளியின் படுக்கைக்குப் பக்கத்தில் விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்த அழகுள்ள ஒரு ஸ்திரீ உட்காந்திருந்தாள். அவள், தர்மசீலனும், சத்தியவதியும் வந்ததைப் பார்த்து கொஞ்சம் ஆச்சரியப்பட்டு இவர்கள் யாரென்று விசாரித்தாள். இப்படியிருக்க அந்தக் குழந்தைகளோ சத்தியவதியைச் சூழ்ந்துகொண்டு அவள் கையிலிருந்த சிறுகூடையில் ஆகாரமிருப்பதை வாசனையால் தெரிந்துகொண்டு அதைக்கைக்கொள்ள ஆரம்பித்தன. இவைகளை யெல்லாம் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்த ஐசுவரியமுள்ள ஸ்திரீயானவள் தர்மசீலனைப்பார்த்து "ஏன் ஐயா இந்த வியாதி ஒட்டுவாரொட்டி யல்லவோ?" என்று கேட்டாள்.

தர்மசீலன்.—"இல்லை. அந்த ஸ்திரீமிகவும் மெலிந்துபோய் விட்டபடியால் சிலநாளாய் வேலைசெய்யத் திறமை யில்லாமல் போய்விட்டாள். சரியான சாப்பாடு இல்லாததினுலேயே இந்த ஸ்திதிக்கு வந்துவிட்டாளே தவிர, வியாதியினுல்கூடவரவில்லை." என்ருன்.

அலங்காரவினோதி.—(இது தான் அந்த ஐசுவரியமுள்ள ஸ்திரீயின் பெயர்.) "ஆகா என்ன ஆச்சரியம். ஏன் அவள் தர்மவைத்திய சாலைக்குப் போகவில்லை? இந்ததர்ம வைத்திய சாலையைக் கண்டால் ஏதோ ஒரு விதமான வெறுப்பிருக்கிறது. அது மிகவும் மூடத்தனம். எனக்குத் தெரிந்தமட்டில் அநேகர் இந்த தர்ம வைத்திய சாலைகளுக்குப் போவதைப் பார்க்கிலும் பிச்சையெடுப்பது நலமென்று நினைக்கிருர்கள்."

தர்மசீலன்.—"அப்படி யிருந்தாலது மூடத்தனந்தான். ஆனுல் பிறருடையஒத்தாசையை எதிர்பார்ப்பதைப் பார்க்கிலும் தங்களாலியன்றமட்டும் வேலைசெய்து சம்பாதிப்பது நலமென்று நினைத்து முயலுபவரை நாம் புகழவேண்டுமே தவிர வேறில்லை" என்ருன்,

அலங்காரவினோதி.—"இதுவரையில், காளி தன்னுடைய ஸ்திதியைப்பற்றி எனக்குச் சொல்லியனுப்ப வில்லையே யென்று மிகவும் வருத்தப்படுகிறேன். எனக்குத் தெரிந்திருந்தால் அவளுக்கு முன்னமேயே நான் ஒத்தாசை செய்திருப்பேன்." என்ருள்.

சத்தியவதி.—"ஆனுல் உங்களுக்கு இவளை முன்னமேயே தெரியுமோ, அம்மா?"

அலங்கார வினோதி.—"ஆம், அதாவது என்வீட்டில் சில நாள் அவள் பாத்திரங்கள் தேய்த்துக்கொண்டிருந்தாள்."

காளி.—மிகவும் வருத்தத்துடனே, "நாட்களல்ல, மாதங்கள்" என்ருள்.

அலங்காரவினோதி.—"காளி இரண்டு மூன்று நாளைக்கு முன் எனக்கு சொல்லியனுப்பினுள். நான் இன்றைக்கு என்னுடைய வண்டிக்காரனைக் கூப்பிட்டு, இவள் வீடு எவ்விடத்திலிருக்கிறதென்பதை விசாரித்து வரும்படிச் செய்தேன். என்னுடைய உடம்பு மிகவும் துர்ப்பலமாக விருந்தபோதிலும் இங்கேவரத் துணிந்துவிட்டேன்"

சத்தியவதி.—அலங்கார விநோதினியின் டம்பத்தைப்பார்த்து மயங்கி சொல்லுகிருள்: "அம்மணி! உங்களுடைய குணம் எவ்வளவு நல்லகுணம். காளி, நிசமாக மிகவும் ஏழைதானம்மணி."

அலங்கார விநோதி.—"நானுமப்படியே நினைக்கிறேன். ஆனல் அவளுக்கு உங்களைப்போன்ற சிநேகிதர்கள் ஒத்தாசை செய்யப் பிரியமும், திறமையு முள்ளவர்களாய் அகப்பட்டார்களே என்று மிகவும் சந்தோஷப்படுகிறேன்."

சத்தியவதி.—எங்களுக்கு, ஒத்தாசை செய்யப் பிரியம் நிரம்பத்தா னிருக்கிறது. அவ்வளவுக்கு திறமை மட்டுந்தா னில்லை."

அலங்காரவிநோதி,—"என்னுடைய ஸ்திதியு மப்படியேதான். பணக்காரர்களென்று பெயர்வைத்துக்கொண்டிருக்கிற எங்களுக்கு எப்பொழுதும் செலவுதானிருக்கிறது."

"இருந்தபோதிலும் இப்பொழுது காளிக்குஏதேனும் கொஞ்சம் கொடுக்கிறேன்" என்று சொல்லி தன் மடியில் சொருகியிருந்த பட்டுச் சுருக்குப்பையை யெடுத்து அதிலிருந்த தங்கவளையங்களைநீக்கி உள்ளே கையைவிட்டு செப்புக்காசுகளில் சிலவையெடுத்து காளியின் கையில் கொடுத்தாள். கொடுத்தவுடனே, காளி கொஞ்சங்கூட சந்தோஷமடையாமல் காசுகளை திருப்பிக் கொடுத்துவிட எத்தனித்தாள்."

சத்தியவதி.—"நோயினுல் மிகவும் வருந்துகிற படியால் காளி உங்களுக்கு சரியான வந்தனஞ் செய்ய முடியாமலிருக்கிருள். அம்மணி, நீங்கள் கொடுத்ததை நான் இந்தக் குடும்பத்தில் நல்ல உபயோகப்படுத்துவே னென்று நம்புங்கள். அவர்களுக்கு இதுவரையில் யாதொன்றுமில்லாமல் கஷ்டப்படுகிருர்கள்."

அலங்காரவிநோதி.—"நீங்களாவது, தர்மசீலனவது காளியைப்பற்றி எனக்குச் சமாசாரமனுப்பினுல் மிகவும் சந்தோஷப்படுவேன். என்னுடைய தேகஸ்திதி அடிக்கடி இப்படிப்பட்ட பிரயாணங்கள் செய்ய இடங்கொடுக்க மாட்டாது."

சத்தியவதி, தானே கூடியசீக்கிரத்தில் அலங்கார விநோதி வீட்டிற்குப்போய் காளியைப்பற்றி சமாசாரம் சொல்லுகிறே னென்று ஒப்புக்கொண்டாள். அலங்காரவிநோதி உடனே அக்குடிசையை விட்டு வாயலில் நின்று கொண்டிருந்த தன்னுடைய குதிரைவண்டியில் ஏறிக்கொண்டு வீட்டுக்குப் போய் விட்டாள்.

வீட்டுக்குத் திரும்பிவந்தவுடனே, சத்தியவதி தன் கணவனைப்பார்த்துச்சொல்லுகிருள்:—

"அலங்கார விநோதி அவ்வளவு பணக்காரியாகவும், தர்மசிந்தனை யுள்ளவளாயு மிருப்பதினுலே எவ்வளவு சுகமடைந் திருக்க வேண்டும்"

தர்மசீலன்.—"அவள் நிரம்பப் பணக்காரியென்று உனக்கு எப்படித் தெரியும்"

சத்தியவதி.—"ஏன் அவளுடைய ஆடைகள் எவ்வளவு விலை யுயர்ந்தனவா யிருந்தன, பார்க்கவில்லையா?"

தர்மசீலன்.—"அது ஒருபெரிதல்ல, நம்மைப்போலவே, தர்மம்செய்ய பிரியமிருக்கிறதே யொழிய, திறமையில்லை யென்று அவள் சொல்லவில்லையா?"

சத்தியவதி.—"இருந்தபோதிலும் அவளுடைய ஸ்திதிக்கும், நம்முடைய ஸ்திதிக்கும் ஏணி வைத்துப் பார்க்கவேண்டியதுதான். ஏன் அவளுடைய ஒரு ரவிக்கைக்கு ஈடாகுமா என்னுடைய எல்லா சீலைகளும்."

தர்மசீலன்.—"அவள் தன்னுடைய ரவிக்கையிலிவ்வளவு பணம் செலவு பண்ணினுல் பிறருக்குக் கொடுக்க சொஞ்சமெனும் அகப்படாதுதான்"

சத்தியவதி.—"நீங்கள் சொல்லுவது அவ்வளவு சரியல்ல. ஒருவர் நல்ல ஆடையாபரணங்கள் தரித்துக்கொண்டிருந்தால் அவர்கள் பெரும்பாலும் பணக்காரர்கள் தானென்று நினைக்க சந்தேகமென்ன!"

தர்மசீலன்.—"எல்லோரும் ஞாயத்தினின்றும், சத்தியத்தினின்றும், வழுவாமல் நடப்பாரானுல் நீ சொல்லுவது சரிதான். ஆனல் எவ்வளவு தடவை நாம் வெளிப்படையான சங்கதிகளை மட்டும் பார்த்துவிட்டு உள்ளே ஆராய்ந்து பாராமல் மோசம்போகிருேம். அலங்காரவிநோதி நம்மைப் பார்த்து, காளிக்கு நம்மைப்போலொத்த "தர்மஞ்செய்யப் பிரியமும், திறமையுமுள்ள" சிநேகிதர்கள் அகப்பட்டார்களே யென்று சந்தோஷப்பட வில்லையா. ஆகையால் நாமும் பணக்காரர்கள்தானென்று அவள் நினைத்திருக்க வேண்டும்."

சத்தியவதி.—ஓ! என்னுடையபழுக்காப்புடவையையும், ரவிக்கையையும் பார்த்துவிட்டு ஒருபொழுதும் அப்படி நினைத்திருக்க மாட்டாள்."

தர்மசீலன்.—நல்லது, ஒருக்கால் உன்னுடைய ஆடைகளை அவள்கவனித்துப் பார்த்திருக்க மாட்டாள். உன்னுடைய அழகையும், நீ பசியுள்ளவர்களுக்கு அன்னமிட்டுக் கொண்டிருந்ததையும் மட்டும் பார்த்திருப்பாள்.

சிலநாள் கழிந்தபின்பு காளிவீட்டில் எல்லாம் சந்தோஷமாய்த் தானே விளங்கிற்று. சிலருடைய தர்ம சிந்தனையால் செய்யப்பட்ட ஒத்தாசையினாலேயும், பின்னும் சிலருடைய டம்பத்துக்காகசெய்யப்பட்ட ஒத்தாசையினாலேயும் இவள் வீடு எப்பொழுதும் போல சிறப்புற்று விளங்கினதுமன்றி, காளியும் எழுந்துட்கார்ந்து தன் தையல் வேலையைச் செய்யத் தொடங்கினாள். வேலைசெய்து தங்கள் மெய் வருத்தத்தால் சம்பாதித்து சீவனம் செய்யும் ஏழைகளுக்கு நல்ல சமயத்தில்செய்த ஒரு சிறிய உபகாரமும் அவர்களுக்கு மிகுந்த சந்தோஷத்தை விளைவிக்கிறது.

இது இப்படியிருக்க தர்மசீலனோ தன் தொழிலில் விடாமுயற்சி செய்துவந்தான். எமலோகப்பட்டணத்தை எட்டிப்பார்த்த காளியை மீண்டும் இவ்வுலகத்திற்குக் கொண்டுவந்த தர்மசீலனுடைய பெயர் நாடெங்கும் பிரசித்தமாயிற்று. இதுவும்தவிர இதைக் காட்டிலும் வெகு நோயுற்ற ஒருவனை சௌக்கியம் பண்ண எத்தனிக்கும்படியாயிற்று.

ஒருநாள் மரணாவஸ்தையிலிருந்த ஒரு மனிதன் வீட்டுக்கு இவனை யிட்டுக்கொண்டுபோனார்கள். அங்கே போனவுடனே ஏழைகளுக்குப் பெரும்பாலுமுள்ள மூடபக்தியும், அறிவின்மையும் அங்கு குடியிருப்பது கண்டு வருத்தமுற்றான். அந்த நோயாளியைக் கீழே பரப்பப்பட்ட சில வைக்கோலின்மேல் படுக்கச்செய் திருந்தார்கள். அவனுறவினர்களெல்லாம் அவன் படுக்கையைச் சூழ்ந்துகொண்டு விசித்து விசித்து அழுது கொண்டிருந்தார்கள். இதுவுந் தவிர வேறு அநேகர் இந்த வேடிக்கையைப்பார்க்க வந்து கூட்டங்கூடி அங்கிருந்த சிறிது காற்றோட்டத்தையும் அடைத்து விட்டார்கள். சில மாந்தர்கள் தங்களுக் கெப்பொழுது மரணாவஸ்தை வந்து விடுமோ வென்று திகிலடைந்த போதிலும், பிறர்களுடைய மரணத்தைப்பார்க்க ஆவலுள்ளவர்களாயிருக்கிறார்கள். இப்படி யிருக்க, நம்முடைய வைத்தியன், தேனீக்கூட்டம்போல மொய்த்துக்கொண்டிருந்த சனங்களை யெல்லாந் துரத்திவிட்டு, பிறகு தனக்குத்தெரிந்தமட்டில் சீவதாது உண்டு பண்ணும்படியான சில மருந்துகளைக் கொடுத்தான். சற்றுநேரங் கழித்து நோயாளி சில பெருமூச்சுகள்விடத் தலைப்பட்டான். பின்னும் சில நாட்சென்றபின் எல்லோராலும் கைவிடப்பட்ட நோயாளியைத் தர்மசீலன் சௌக்கியப்படுத்தி விட்டானென்று ஊரெங்கும் சொல்லத்தொடங்கினார்கள்.

(இன்னும் வரும்.)

க. ஐயராமய்யர். B. A.

## மாதர்மஞ்சரி.

### IV. எலிஸபெத் கில்பெற்ட் சரித்திரம்.

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப, எண்ணியார் திண்ணிய ராகப் பெறின்.*"—குறள்.

"கண்ணிற்சிறந்த உறுப்பில்லை" யென்று வாசித்திருக்கிறோம். ஒரு அன்புள்ள தாயானவள் தன் அருமைக் குழந்தையை 'என் கண்ணே!' என்று சொல்லி மார்போடு அணைத்துக் கொள்வதும், ஒரு புருஷன் தன்காதலியை 'என்கண்ணாட்டி!' என்றழைப்பதும், "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்ற பெரியோர் வாக்கும், இன்னும் இவைபோன்ற பலவசனங்களும், கண்ணின் சிறப்பை நன்றாய் விளக்குகின்றன. ஓர் அந்தகனது செய்கைகளைக்கண்ட மாத்திரத்தில், கண்ணின் பெருமை வெளிப்படும். இச்சரித்திரம், குழந்தைப் பருவத்திலேயே தன் கண்களை யிழந்த ஓர்பெண்ணைப் பற்றியது என்று சொல்லும்பொழுது, அவளைப் பற்றிச் சரித்திரமெழுதும்படி யென்ன இருக்கலாம் என்று அநேகர் சந்தேகிப்பர். இவ்வளவு முக்கியமான உறுப்பை யிழந்தபின்னும், செய்யப்புகும் காரியங்களில் மனத்திண்மை யிருப்பின் எவ்வளவோசெய்து முடிக்கலா மென்பதையும்; 'குருடனுக்குக் குருடன் வழிகாட்டினாற்போலும்' என்றவசனம், சோம்பேறிகளான குருடர்களுக்கு மட்டுந்தான் பொருந்தும் என்பதையும்; 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' என்ற பழமொழியின் உண்மையையும், இச்சரித்திரத்தால் காண்பிப்போம்.

எலிஸ்பெத் கில்பெற்ட் என்பவள் இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்ட் நகரத்தில் 1826-ம் வருஷத்திற் பிறந்தாள். முதலில் அவள் கண்கள் பிரகாசமாயிருந்தன. அவளுக்கு இரண்டாம் வயதானவுடன் ஓர் விதக் காய்ச்சல் வந்தது. அப்பொழுது அவள் தாயாருக்குப் பிரசவகாலமாயிருந்தது. அவள் தகப்பனார்தான் அவளைச் சாக்கி

* காரியங்களைச் செய்வதில் மனத்திண்மை யுடையார், தாங்கள் அடைய வேண்டுமென்று எண்ணியவற்றை நினைத்தவாறே, எளிதில் அடைவர்.

ரதையாய்ப் போஷித்து வந்தார். அவரில்லா விட்டால் அவள் இறந்துபோயிருப்பாள். அந்த சுரத்தில் அவள் தன் கண்களை முற்றிலும் இழந்தாள். அவளுக்கு அநேக சகோதரிகளிருந்தார்கள். அவளுடைய தாய்தந்தையர்கள் வித்தியாசமின்றி அவளுக்கும் (மற்ற சகோதரிகளுக்குச் சொல்லிக்கொடுத்ததுபோல) மூன்று பாஷைகளும் சங்கீதமும் படிப்பித்து வந்தார்கள். அவள் தன் அங்கக் குறையை உணரக்கூடாதென்பது அவர்கள் முக்கிய கருத்தாயிருந்தது. அவளும் தன்சகோதரிகளுடன் விளையாடி வந்தாள். அவளுக்கு ஓர் அபாயமும் நேரிடாமல் பத்திரமாய்க் காத்துக்கொள்வது கூட அவளுக்குத் தெரியாமற் செய்து வந்தார்கள். பிறருதவி ஆவசியகமென்று அவளுணரவில்லை. அவளுடைய உற்சாகமும் மன தைரியமும் குறையவில்லை. ஆனால் அவளுடைய சகோதரிகள் தகுந்த பருவத்தை யடைந்தகாலம், அவளுக்கு விசனத்தையே விளைக்கத்தக்கதாயிருந்தது. அவர்களைப்போல் வெளியே உலாவி, பலருடன் பழகித், தன் மனதுக்கு இசைந்தவரை மணம் புரிந்துகொள்ள முடியவில்லை. அவளை யார் கலியாணஞ்செய்து கொள்வார்கள்? அநேக நாட்களைக் கண்ணீரும் கம்பலையுமாய்க் கழித்தாள். ஆனால், சீக்கிரம் அவள் மனவருத்தத்தை நீக்க மருந்து தேடிக்கொண்டாள். அதென்னவெனில், தன்னைப்போன்ற குருடர் குருடிகளின் கஷ்டங்களை நிவிர்த்திக்கும் பொருட்டு முயற்சிக்கத் தொடங்கினாள். பிறருக்கு நன்மை விளைப்பதில் தான் சந்தோஷத்தையும் திருப்தியையும் அடைந்தாள்.

ஓர் சமீபபந்து இறக்குமுன் இவளுக்கு ஏராளமான திரவியத்தைக் கொடுத்துவிட்டுப் போனாள். இந்தப்பணம் இல்லாவிட்டால் எலிஸபேத் ஒருநன்மையும் செய்திருக்க முடியாது. தன் தாய் தந்தையர்கள் எவ்வளவு அன்புள்ளவர்களா யிருந்த போதிலும், அவர்களுடைய பணத்தைத் தாராளமாய்ச் செலவிட அவள் மனம் சம்மதித்திராது. தனக்குப் பணம் வந்தவுடன் தன்னிஷ்டப்படி செலவிடச் சமயம் வாய்த்தது. அவளுடைய கோரிக்கைகளை யெல்லாம் நிறைவேற்றப் பணமிருந்தது.

இந்த சமயத்தில் பிரான்ஸ் தேசத்தில் ஒருவர் குருடர் எழுதும்படி ஓர் யந்திரம் உண்டு பண்ணினார். எலிஸபேத் அதன் மூலமாய் லேவி என்ற ஓர் குருடருக்கு எழுதத்தொடங்கினாள். அவர் அவளுடைய கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்கு வேண்டிய உதவி தானும் தன் மனைவியும் கொடுப்பதாக ஒத்துக் கொண்டார். அன்றியும், மாதர் நிலைமையை விருத்தி செய்வதில் முயர்சித்து வந்த மிஸ் பாத்தர்ஸ்ட் என்பவளும் இவளுக்கு உதவி செய்தாள். குருடர்களாலானமட்டும் தங்கள் நிலைமையை விருத்திசெய்து கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் எலிஸபெதினுடைய உயிர் வாழ்க்கை மேம்பாடடைந்தது.

அக்காலத்தில் குருடர்களின் நிலைமையை விருத்தி செய்வதற்கு ஒருவித ஏற்பாடு மில்லை. இப்பொழுது இங்கிலாந்திலுள்ள குருடர் கலாசாலை அப்பொழுது கிடையாது. குருடர்கள், தங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதை ஒருவர் உதவியின்றிச் சம்பாதித்துக் கொள்ளும்படி, செய்யவேண்டுமென்று எலிஸபேத் விரும்பினாள். சங்கீதம் குருடர்களுக்கு நல்ல ஜீவனம். பிறவிக் குருடர்களும், இளமையிற்கண் ணிழந்தோர்களும், சங்கீதம் கற்றுக்கொண்டு அதன் மூலமாய் ஒருவர் உதவியின்றி ஜீவிக்கலாம். ஆனால், முதிர்ந்தவயதில் கண்ணை யிழந்தோர்கள் சங்கீதம் கற்றுக்கொள்வது எளிதல்ல. அப்படிப்பட்டவர்களுக்குத் தக்க ஜீவனங்களை யுண்டுபண்ணும் பொருட்டுத்தான் எலிஸபேத் முக்கியமாய்ப் பிரயாசப்பட்டாள். முதலில், குருடர்களால் செய்யப்பட்ட பாய்கள், கூடைகள், துடைப்பங்கள் முதலிய சாமான்களை வாங்கி விற்கும் பொருட்டு ஓரிடம் வாடகைக்குத் திட்டஞ்செய்து கொண்டாள். லேவி துரையும், பாரார் என்ற ஓர்குருட்டுத்தச்சனும் அவளுக்கு உதவிசெய்தார்கள். தன்னுலியன்ற மட்டும் அந்தச் சாமான்களை விற்பதில் உழைத்தாள். இது எளிதல்ல. அநேக குருடர்களுக்குக் கைத்தொழில் கற்றுக்கொடுக்கல் வேண்டியதா யிருந்தது. அநேகர் சரீரத்திட மில்லாதவர்களா யிருந்தார்கள். சிலர், நம் தேசத்தாரில் அநேகரைப்போல, வேலைசெய்து பிழைப்

பதிலும் பிச்சையெடுப்பது நல்லதென்று நினைத்திருந்தார்கள். சாதாரண ஊக்கத்தை யுடையவர் இந்த வருத்தங்களைக்கண்டு மலைந்து விடுவார்கள். ஆனால் எலிஸபெத் சிறிதும் அதைரியப்படவில்லை. தன் கிழ் வேலை செய்துவந்த குருடர்களில் அநேகர், தங்களுக்குப் போதுமானமட்டுஞ் சம்பாதித்துக்கொள்ளச் சக்தியற்றவரா யிருந்தார்கள். அப்படிப்பட்டவர்களைத் தன்கையிலிருந்து பணங் கொடுத்துக் காப்பாற்றினாள்.

பிரான்ஸ்தேசத்திற் செய்யப்பட்ட ஒருவிதக் கூடை இங்கிலாந்தில் அதிகமாய் விலைப்போயிற்று. உடனே லெவி துரையும் அவர் மனைவியும், அத்தேசத்துக்குப் புறப்பட்டுப் போய், வெகு கஷ்டத்துடன், அத்தேசத்துப் பாஷை தெரியாதவர்களாயிருந்தும், அக்கூடை செய்யப்படும் இடத்தைக் கண்டுபிடித்துத் தாங்கள் அது செய்யும் விதத்தைக் கற்றுக்கொண்டு, இங்கிலாந்துக்கு வந்து, தனக்கும் எலிஸபெத்துக்கும் தெரிந்த குருட்டு வேலையாளிகளுக்கெல்லாம் சொல்லிக்கொடுத்தார்கள்.

எலிஸபெத் ஆரம்பித்த வேலை சீக்கிரம் பலத்தை யடைந்தது. அவளால் இதுவிஷயமாய் ஏற்படுத்தப்பட்ட சபை, மகாராணியின் பேருதவியைப் பெற்றது. அச்சபை யிப்பொழுது செழித்தோங்குகிறது. அதனால் விளையும் நன்மை அளப்பரிதாயிருக்கின்றது. அதில் வேலை செய்யும் குருடர்களாற்செய்யப்பட்ட சாமான்கள் சரியானபடி விலைப்போய் அவர்கள் ஜீவனத்துக்கு வேண்டிய இலாபத்தை யளிப்பதுமன்றி, சொற்பக் கொடைப்பணத்துடன், வேலைசெய்யமுடியாத குருடர்களுக்குக்கூட ஜீவனத்துக்கு வழியாகிறது. எலிஸபெத் கில்பேற்ட் என்ற குருட்டுப்பெண், தன் முயற்சியினாலும் மனத்திண்மையினாலும், பிச்சையெடுத்து ஜீவனம் பண்ணிக்கொண்டிருந்த குருடர்கள் அநேகர், ஞாயமாய் ஒருவர் உதவியுமின்றி ஜீவனஞ் செய்வதற்குண்டான வழியை ஏற்படுத்தி அழியாக் கீர்த்தியை யடைந்தாள். பிறருக்கு நன்மை விளைப்பதில் தான் சந்தோஷத்தையும் மனதிருப்தியையும் தேடிக்கொண்டாள். அவள் அநேகவருஷங்களாய் நோய்களால் வருத்தப்பட்டு, ஏழுவருஷங்களுக்குமுன், 1885-ம் வருஷத்தில் இறந்துபோனாள்.

இச்சரித்திரத்தை வாசிக்கும் கண்ணுள்ள பாக்கியவான்களில் நூற்றி லொருவரேனும், பிறருக்கு நன்மைவிளைப்பதில் எலிஸபெத் கில்பேற்ட் என்ற குருட்டுப்பெண் அடைந்த சந்தோஷத்தில் கொஞ்சமாவது அதே மூலமாய் அடைந்து, பிறர் நன்மையைத் தேடுவாராயின், இந்நாடு எவ்வளவோ முன்னுக்கு வந்துவிடுமென்பதிற் சந்தேகமில்லை.

பேரேரி.

---

## சாவித்திரி சரித்திரம்.

—o—

### நாலாவது அதிகாரம்.

ஒரு நாள்கூடத்தவறாமல் நடேசன் எனக்குப் படிப்புச் சொல்லிக்கொடுத்துக் கொண்டுவந்தான். அக்காலத்தில் நான் அடைந்த திருப்தியையும் மனமகிழ்ச்சியையும்பற்றி எந்தவேளையில் நினைத்தாலும் எனக்குச் சந்தோஷம் உண்டாகின்றது; துக்கமெல்லாம் மாறிப்போய் விடுகிறது. அப்பொழுது, நான் காலையிலெழுந்திருந்தவுடன், வீட்டில் நித்தியமாய் உபயோகிக்கப்படும் பாத்திரங்களை யெடுத்துக்கொண்டு வாய்க்காலுக்குப்போய் அவைகளைச் சுத்திசெய்து, நானும் பல்தேய்த்து முகங்கழுவியானபின், வீட்டுக்குத் திரும்பி வருவேன். நான் சுத்தி செய்ததில் அந்தப் பாத்திரங்கள் எவ்வளவுக் கெவ்வளவு பிரகாசத்தை யடைந்தனவோ, அவ்வளவுக் கவ்வளவு எனக்கும் சந்தோஷமுண்டாகும். வீட்டுக்கு வந்து சாப்பிட்டுத் தலையை வாரிப்பின்னிக்கொண்டானபின், என் அத்தையம்மாளுடன் வாய்க்காலிலிருந்து நீர் மொண்டு கொண்டு வருவேன். நான் பெரிய குடத்தில் ஜலங்கொண்டு வருவதைப்பற்றிக் கர்வத்தையடைந்திருந்தேன். நான் குதித்துக் குதித்து நடப்பதாக என் தோழிகள் பரிகாசஞ் செய்வதுண்டு. பிற்பாடு நான் புஸ்தகமும் 'சிலேட்' பலகையும் எடுத்துக்கொண்டு மாடியில் கோபாலனும் நடேசனும் வாசிக்கும் இடத்துக்குப்போவேன். நடேசன் எனக்கு ஒரு மணிநேரம் பாடஞ் சொல்லித் தருவான். சிலநாள்களில் கோபாலன் சொல்லித்தருவான். முந்தினநாட்பாடத்தைச் சரியாய் ஒப்புவித்து விட்ட நாள்களில் எனக்குண்டான கர்வத்தைப் பற்றி நினைக்கும்பொழுது சிரிப்பு வருகிறது. ஒருநாள் கோபாலன் போட்ட ஐந்து கணக்கு வினாக்களுக்கும் பிசகாமல் பதிற் சொல்லி விட்டேன். உடனே அடங்காச் சந்தோஷத்துடன்கண்டபடி குதிக்கத்தொடங்கினேன்,

கோபாலன் விளையாட்டாக:—“சாவித்திரி! ‘துள்ளினமாடு பொதிசுமக்கும்’. அதிகமாய்த் துள்ளாதே. கணக்கு மட்டுந் தெரிந்தாற் போதுமா? இன்னும் ‘கொன்றை வேந்தன்’ ஒப்புவிக்கவில்லையே? நீ இந்தப்படிப்புக்கு இவ்வளவு துள்ளுகிறாயே; அதிகமாய்ப்படித்து விட்டால் என்னமாய் முடியுமோ தெரியவில்லை. உன் சித்தியைப்போல் ஆகமாட்டாயே?” என்றான். செங்கமலத்தைப்பற்றிச் சொன்னவுடன், வெட்கத்தினால் எனக்குக் கண்ணீர் பெருகிற்று. கோபாலனுக்கு அவளை நன்றாய்த் தெரியாது. நானோ, அவளை முற்றிலும் அறிந்திருந்தேன். அவள் பெரிய புஸ்தகங்களை வைத்து வாசிப்பதை நான்பார்த்திருந்தேன். அவ்வளவு கல்வியோடு அவள் செய்த விஷயங்களைப் பற்றியோசித்தவுடன் என் கர்வம் எல்லாம் குன்றிப் போய்விட்டது. அப்பொழுது தான், கோவிந்தப்புரத்தில் சிலர் ‘செங்கமலம் தனக்கு அர்த்தமாகாத புஸ்தகங்களை யெல்லாம் வாசித்துத் தெரிந்து கொள்வது போல் பாசாங்கு பண்ணுகிறாள்,’ என்று சொன்னது மெய்யாயிருக்கலா மென்று நானெண்ணினேன். படித்துவிட்டால் வேறொன்றும் வேண்டாமென்ற எண்ணம் என்மனதிற் குடிகொண்டிருந்தது. கல்வியைப்பார்க்கிலும் சிறந்தது கிடையாதென்று நினைத்திருந்தேன். கோபாலனுடைய வாத்தியாருக்குத் தெரிந்தமட்டும் நானும் படிக்க வேண்டுமென்பது என் பேராசையாயிருந்தது. அவ்வளவு வாசித்து விட்டால் பிறந்ததின் பயன் பெற்றாய்விடும் என்பது என் எண்ணம், பெரிய புஸ்தகங்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் நான் பெருமூச்சு விடுவதுண்டு. இந்த எண்ணத்துடன் நான்சொன்னதாவது:- “கோபாலா! சித்தி செங்கமலம் மிகப்படித்தவளென்று நீ நினையாதே. நம்மூரார் அநேகர் அவளைப் பாசாங்குக்காரி யென்று சொன்னார்கள். மிகப்படித்தவளாயிருந்தால் அவள் அப்படி நடப்பாளா?” என்றேன். உடனே நடேசன் வாசித்துக்கொண்டிருந்த புஸ்தகத்தை ‘மேசை’மேல் எறிந்துவிட்டுச்சொன்னதாவது:—

“ஓஹோ! பெண்டாட்டி! உன் எண்ணம் அப்படியோ? இதற்கு முன்பும் இரண்டு மூன்று தடவை பார்த்தேன். படித்து விட்டால் சகல நற்குணங்களும் வந்து விடுமென்று நினைத்திருக்கிறாய். “நம்மையாளும் அங்கிலேயர் தேசத்தில் பேக்கன் என்றொரு பிரபு விருந்தார், கல்வித்தேர்ச்சியிலும் சுயபுத்தியிலும் யாவரிலுஞ் சிறந்தவரா யிருந்தார். உலகத்தில் இதுவரையும் தோன்றிய புத்திமான்கள் ஒருவரும் அவருக்கு ஈடாகாரென்று சொல்வதுண்டு அப்பிரபு தன் புத்தி வல்லமையினால் சிரேஷ்ட நியாயாதிபதியின் ஸ்தானத்தை யடைந்திருந்தார். அவர் அநேக பிரபந்தங்கள் இயற்றியிருக்கிறார். ஆங்கிலேய தத்துவ சாஸ்திரத்துக்கு மூல கர்த்தராக அவரை மதிப்பதுண்டு. அவர் சன்மார்க்க நடைகளைப் பற்றி ஓர் சிறந்த பிரபந்தமெழுதியிருக்கிறார். ஆனால் அப்பிரபுவே, இழிவாயும் அயோக்கியத் தனமாயும் நடந்ததற்காக நியாயாதிபதி உத்தியோகத்திலிருந்து தள்ளப்பட்டு, அபராதமும் போடப்பட்டார். பார்த்தாயா! அந்த மகாபண்டிதரின் கல்வி யெல்லாம்பிரயோசனப்படவில்லை. செல்வம் பொழியும்சிரேஷ்ட நியாயாதிபதி உத்தியோகத்திலிருந்து கொண்டே ‘இலஞ்சம்’ வாங்கினார். அவர் விஷயத்தில் அவரியற்றிய சன்மார்க்கப் பிரபந்தகளெல்லாம் ‘எட்டுச்சுரைக்காய்’ ஆய்விட்டன. அவருடைய கல்வித்திறமையையும் புத்தி விசாலத்தையும் பற்றி யோசிக்கும் பொழுது, உன் படிப்பும் என் படிப்பும் எம்மட்டு? அப்படியிருந்தும் தாழ்ந்த ஸ்திதியிலிருக்கும், கல்விப்பயிற்சி யில்லாத அநேகர், தங்கள் நாணயமான செய்கைகளால், அவரை மிஞ்சிவிட்டார்கள். படிக்கிறோமென்று கர்வங் கொள்ளாதே. சற்குணம் கல்வியிலுஞ் சிறந்தது. அதைத் தான் எவ்விதமாவது தேட வேண்டும். கோபாலா! ஒன்பது மணியாய்விட்டது. இனிமேல் ஸ்நாநம் பண்ணிச், சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டாமா? வாய்க்காலுக்குப் போவோம் வா.” என்று சொல்லிக்கொண்டே நடேசன் எழுந்திருந்தான்.

நடேசனும் கோபாலனும் பள்ளிக்கூடத்துக்குப் போயிருக்கும் வேளைகளில், நான் என் தோழிகளுடன் ‘பல்லான் குழி,’ ‘கட்டம்’, ‘சோகி’, ‘கழச்சி’ முதலியவை விளையாடுவேன்; அல்லது என் அத்தையம்மாளிடத்தில், ‘அல்லியரசாணிமாலை’, ‘புரந்தரன் களவுமாலை’, ‘வள்ளியம்மன்சோபனம்’முதலிய பாட்டுக்களைச் சொல்லிக் கொள்வேன்; அல்லதுஎன்பாடங்களைப் படிப்பேன். இவ்விதமாய்க் கவலையற்று வாசித்துக் கொண்டிருந்தேன்.

ஐயோ! அக்காலத்தில், அற்ப விஷயங்களுக்கெல்லாம் தன்னை யறியாமற் பொங்கின சந்தோஷத்தை இனிமேல் அடையும் நாளும் வருமோ? இனிமேல் ஒருநாளாவது அப்படிக் கவலையற்றிருக்கக் கிடைக்குமோ? அப்பொழுதுங் கூட முற்றிலுங் கவலையற்றிருக்க வில்லை. கோபாலனாவது, என் அத்தையாவது, நான் செய்யுந் தப்பிதங்களுக்காகக் கோபித்துப்பேசினால், அன்று முழுவதும் விசனமாகவே யிருக்கும். அதுவும்ஒருவிசனமோ? உடனேகொஞ்சிப்பேசுவார்கள்: மனம் குளிர்ந்துவிடும். வீட்டுவேலைகளிலும், பாடங்கள் படிப்பதிலும் உண்டாகும் கவலைகளெல்லாம் அவை செய்தானவுடன்மாறிவிடும். சிலசமயங்களில் என் தகப்பனாரைப்பற்றி நினைப்பேன். செங்கமலத்தின் தாயார் சொன்ன சொற்களும், அவர் பிற்பா

டுபட்ட மனவருத்தமும், திருவநந்தபுரக் கடிதம் வந்தவுடன் அவரும் நானும் அழுததும், உடனே ஞாபகத்துக்கு வரும். கொல்லையில் கிணத்தருகிலாவது, அல்லது மாடியில் ஓர் மூலையிலாவது போயிருந்துகொண்டு விசித்து விசித்தழுவேன். துக்கம் மூச்சுவிட முடியாமல், நெஞ்சையடைக்கும். கொஞ்சநேரத்தில் அழுகிறதின்காரணம் மறந்துபோய்விடும்; எதாவது சேஷ்டை செய்துகொண்டே விசித்துக்கொண்டிருப்பேன்; பிற்பாடு அதுவும் தானகவே நின்றுவிடும்; விளையாடவாவது படிக்கவாவதுபோய் விடுவேன். இவ்விதமாய் இரண்டு மூன்று மாதம் படித்தவுடன், எனக்குத் தமிழ் எழுதக் கொஞ்சம் தெரிந்தது. உடனே என்தகப்பனருக்குக் கடிதம் எழுதவேண்டுமென்று யோசித்தேன். கோபாலனும் நடேசனும் நானெழுதிய கடிதத்தைத் திருத்தாமல் அப்படியே அனுப்புவதாகச் சொன்னர்கள். முதற் கடிதமெழுத எனக்கு இரண்டுநாள் பிடித்தது. அது இப்பொழுது என் கைவச மிருக்கிறது. அதைக் கீழே வரைகிறேன். அதில் ஏராளமாய் மைப்பொட்டுக்க ளிருக்கின்றன. எவ்வளவோ எழுத்துக்களை அடித்திருக்கிறேன். அடிக்குத் தப்பின எழுத்துக்களில் அநேகம் கோழி கிண்டினாற்போல் சொரூபம் தெரியாமலிருக்கின்றன. இவற்றையெல்லாம் அச்சிற்பதிப்பது வருத்தமாயிருப்பதால், கணக்கிடமுடியாத அடிகளும் பொட்டுக்களும் இருப்பதாக நினைத்துக்கொள்ளவேண்டும்:—

கடிதம். *

"யெங்நோ டஅப் பாவுக்குசே வுக்குரேன் ஞங்கள்யெ ல்லாரும் சௌத் கிமாய் எருக்கரம் னீற். ஷெ மாமய் எருப்பத்தர்கு யெழுதுணம்ஞ ங் வாசிக்கரது உமக்குதெறியாதே நடே சன்சொ ல்லித் ராங்அவன் கோபாலன் யிக்ஷ்டங்கணக்கும் படிக்க ரேங்வேறு. விசெக்ஷ மிலை யிப்

படிகு உம்முடை
யகுழன்
தைசாவித்திரி."

இந்தக்கடிதத்தை யனுப்பும்படி நான் கோபாலன் வசம் கொடுத்தவுடன், அவனும் நடேசனும் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்கள். நான் அதை யனுப்பக் கூடாதென்று சொன்னேன். அவர்கள் அதைக் கேட்காமல் அனுப்பிவிட்டார்கள். அவர்கள் மறுபடியும் அதிகமாய்ச் சிரித்ததைக்கண்டு நானும் காரணமின்றிச் சிரிக்கத்தொடங்கினேன். அன்றுமுழுவதும் சிரிப்பாகவேயிருந்தது.

நான் கடிதமெழுதி யொருவாரமாகுமுன் என் தகப்பனர் கோபாலனுக்குக் கடிதமெழுதினர். அந்தக் கடிதத்தையும் கீழேவரைகிறேன்:—

உ

திருவநந்தபுரம்
ஆவணி ௴—2௳

சிரஞ்சீவி குழந்தை கோபாலனுக்கு ஸர்வாபீஷ்டமும் உண்டாவதாக அநேக ஆசீர்வாதம்.

இவடம் க்ஷேமம். அவடத்தில் நீயும் சாவித்திரியும் சங்கரியும் க்ஷேமமாயிருக்கிற விபரத்துக்கு உடனே பதிலெழுதவேண்டியது. நீயும் சாவித்திரியும் எழுதிய விகிதங்கள்* வந்து சேர்ந்தது. பள்ளிக்கூடச் சம்பளம் இல்லாமற் செய்ய முடியவில்லையென்றும் மிஷன் பாதிரிதுரை தயவின்பேரில் அரைச் சம்பளம் கொடுத்து வருகிறதாகவும் எழுதியிருக்கிறாய். அப்படியே செய்யவும். நான் இன்னும் இரண்டு வாரத்தில் இருபதுரூ உண்டில் அனுப்புகிறேன் உனக்கு வேண்டிய புஸ்தகங்கள் இரவல் வாங்க வேண்டியதில்லை. விலைக்கே வாங்கிக்கொள். எப்படியாவது இந்த வருஷம் பரிக்ஷையை ஒப்பேற்றிவிடு.

யாராவது அவடம் வரும்பொழுது நல்ல பிலாப்பழம் ஒன்று அனுப்புகிறேன். நீ அமிதமாய் கண்முழித்துப் படிக்கவேண்டாம். தேகத்தை சௌக்கியமாய் பார்த்துக்கொள்.

சாவித்திரியை யார் வாசிக்கச் சொன்னது. பெண்கள் வாசித்தால் கெட்டுப்போவார்கள். அவள் வாசிப்பதை உடனே நிறுத்தவும். நடேசன் என்பவன் யார். அவன் வர்த்தமானமென்ன. இது விஷயங்களுக்கும் அவடத்துக்ஷேமாதிசயங்களுக்கும் உடனே பதிலெழுதவும். நீ உயர்ந்தகிளாஸில் ஒப்பேறினல் மேல் பரிக்ஷக்கு சம்பளமில்லாமல் வாசிக்கலாமென்று கேள்விப்படுகிறேன். அதற்கு வேண்டிய முயற்சி பண்ணவும்.

வேணும் அநேகஆசீர்வாதம்.
வெங்கிடாசலபதிசகாயம்.
சுப்பய்யர்.

இந்தக்கடிதம் வந்தவுடன் எனக்கு விசனம் இவ்வளவென்றில்லை. செங்கமலத்தின் செய்கைகளுக்காக நான் படிப்பை நிறுத்தவேண்டியதாயிற்று. இக்கடிதத்துக்கு நாங்கள் பதிலெழுதியதை அடுத்த அதிகாரத்திற் கூறுகிறேன்.

சாவித்திரீ.

* சரியானபடி:— "என்னுடைய அப்பாவுக்குச் சேவிக்கிறேன். நாங்கள் எல்லாரும் சௌக்கியமா யிருக்கிறோம். நீர் க்ஷேமமாயிருப்பதற்கு எழுதவேணும். நான் வாசிக்கிறது உமக்குத் தெரியாதே? நடேசன் சொல்லித்தருகிறான். அவன் கோபாலனுடைய இஷ்டன். கணக்கும் படிக்கிறேன். வேறு விசேஷமில்லை.

இப்படிக்கு உம்முடையகுழந்தை
சாவித்திரி."

* விகிதம்—கடிதம்.

## தமிழ்மொழி வளர்த்தல்,

அல்லது

## தமிழ்ப் பாஷையை அபிவிர்த்தி செய்யும் மார்க்கங்கள்.

---

(124-வது பக்கத் தொடர்ச்சி.)

எட்டாவது, தமிழ்ப் புஸ்தகசாலைகள், அல்லது, புஸ்தகாலயங்கள் ஊர்தோறும் ஏற்படுத்தி, மாசாந்தரம் சொற்ப ஊதியம் பெற்றுக்கொண்டோ, அல்லது இலவசமாகவோ, புஸ்தகங்களை வாசிக்கும்படி ஜனங்களுக்குத் தூண்டுதல் செய்தல், தமிழ் பாஷாபிவிர்த்திக்கு மற்றொரு நல்ல மார்க்கமென்று சொல்லலாம். இதற்குத்தான் அங்கிலேயத்தில் 'லைபிரெரி' (Library) என்று பெயர்வழங்கும். அங்கிலேயராஜதானியாகிய 'லண்டன்' பட்டணத்தில் ஒரு புஸ்தகாலயம் 22-மைல் தூரம் நிரப்பக்கூடிய பீரோக்களிலுள்ள புஸ்தகத்தொகை யடங்கியிருக்கும் அற்புதத்தையும், பின்னொரு பட்டணத்தில் அதேவிதமாக ௬௨-மைலுக்கு நீளக்கூடிய புஸ்தகத்தொகுதியுடைய ஒருபுஸ்தகாலயத்தின் அற்புதத்தையும், இன்னும் இவை போன்ற பிரமிக்கத்தக்க கல்வி ஸ்தாபனங்கள் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் அனேகம் இருப்பதாக 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் யாவரும் வாசித்திருப்போமே. தமிழ்நாட்டிலும் இவ்விதஸ்தாபனங்கள் இப்போது சிறிய அளவிலாகிலும்ஏற்படுத்துவதனால் உண்டாகும் நன்மை என்னவெனில்; முதலாவது, தமிழ்பாஷா நூல்களைப் படிப்பதில் ஞானமுடையவராயும், ஆகிலும் பெருந்தொகைகொடுத்துத் தமிழ் புஸ்தகங்களை விலைக்கு வாங்கிவாசிக்க அசக்தராயும் இருக்கக்கூடிய அனேக பாமரஜனங்களுக்குத்தமிழ் பாஷையில் சுலபமாய் விற்பத்தியடைவதற்குப்பெரியசகாயமுண்டாம். இதில், தமிழிலுள்ள எப்படிப்பட்ட புஸ்தகங்களும், எல்லாப் புஸ்தகங்களும், தமிழில் பிரசுரித்து வரும் நானாவிதமான பத்திரிகைகளும் வரவழைத்து வைக்கலாம். இவைகள் இத்தேசத்தில் தற்காலம் நிகழ்ந்து வரும் சங்கதிகளையும் இதரதேச சமாசாரங்களையும் ஜனங்களுக்கு உணர்த்திக்கொண்டு வரும். இதற்கு நாம் முன்சொன்ன வழிகளைப்போல அவ்வளவு பெருந்தொகை செல்லாமல், இது எளிதிற் கைகூடி வருவதாம். இப்படிப்பட்ட புஸ்தகாலயங்கள் ஸ்தாபனம் செய்வதனால், அவை தமிழில் விருப்பமுடையோருக்கு விற்பத்தியைக்கொடுப்பது மன்றி, விருப்பமில்லாதவருக்கு, அதனைப் பிறப்பிக்கக் கூடியதுமாம். அது எப்படியென்றால், தேவாலயங்களில் உற்சவம் நடக்கும்போது வேடிக்கைவைத்துக் காண்பது எப்படி பக்தியில்லாப் பாமரஜனங்களை ஆலயத்திற்கு வசீகரம் செய்து பிற்பாடு அவைமூலமாக அவர்களுக்கு தெய்வத் திருப்பணிவிடைகள் காணக்கிடைத்து தம்மையறியாமல் பக்தியை விளைவிக்கின்றதோ, அப்படிப்போலவே, புஸ்தகாலயங்களிலும் பார்க்கப் பசந்தாகிய அனேக புஸ்தகங்கள் பந்திபந்தியாய் பீரோக்களில் அடுக்கியிருப்பதும், பத்திரிகைகளின் சமாசாரங்களும் வேடிக்கை விநோதங்களும், ஆட்கள் நடமாடுதலும், மேலைக்கு அக்கிரந்தங்களில் ஊடாடாதவருக்குத் தம்மையறியாமல் தாற்பரியம் பிறப்பிக்க ஏற்ற சாதனங்களாகின்றன. தாற்பரியம் எப்போது உதித்ததோ, அதற்குச்சகாயமாகப் புஸ்தகங்களும் எப்போது எளிதில் அகப்பட்டதோ, அப்போது விற்பத்தியென்பதும் அவ்விடத்திலிருந்து வெகுதூரமில்லையென்று தைரியமாய்ச் சொல்லலாம். விற்பத்தியுண்டானால், பொது நன்மைக்கு எவ்வளவும் துணைக்கருவியாயிருக்கின்ற இன்று கூடிய சங்கம்போல, அனேகசங்கங்கள் கூடச்செய்து, மதவிஷயமாயாவது, சாஸ்திரவிஷயமாயாவது, இச்சங்கத்தைப்போல் பாஷா விஷயமாயாவது, அல்லது, பொதுநன்மை கருதும் மற்றெவ்விஷயமாயாவது, சுதேசப்பொது நலங்களை யெடுத்துப் பேசினாம் எண்ணமிடும் உத்தேசமெல்லாம் உருவெடுத்துப் பிரத்தியக்ஷத்தில் நிலைபெறும். ஆகையால், இவ்விதச்சங்கங்கள் கூடுவதே தமிழ் பாஷாபிவிர்த்திக்கு,

ஒன்பதாவது மார்க்கமாக எடுத்துக்கொண்டு அதைக்குறித்து எனது தாழ்மையான அபிப்பிராயத்தைச் சிறிது சொல்லுவேன். இவ்விதசங்கங்கள் கூடிப் பேசுவதனால் கைகூடும் உத்தம காரியங்கள் இத்தனையென்று மட்டிட்டளவுசொல்ல ஒருவராலும் ஏலாது. கூட்டங் கூடாமலும், அபிப்பிராயங்களை உண்மையோடு வெளியிட்டுக் கலந்துகொள்ளாமலும் உலகத்திற்கு நன்மைபயப்பதாகிய ஒரு காரியமும் சாத்தியப்படாது. பொது நன்மைக்கும் சுதேசத்திற்கும் சற்றேனும் வாஞ்சையில்லாதவன், பூமியிற் பிறந்தும் பிறவாதவன். சுயப்பிரயோஜனத்தை மாத்திரமே நாடுவதற்கு இம்மானிட உறுப்புகளும் இந்த விவேகமும் மனோசக்திகளும் வேண்டுமென்றில்லை, ஏனெனில், சுயப்பிரயோஜனமென்பது மிருகங்களாதியான எண்ணூயிரங்கோடி ஜீவராசிகளும் நாடிக்கொள்ளுவதுதான். பின் இந்தமானிட உடம்பை நாம் பெற்றுக்கொண்டதற்கு விசேஷப்பிரயோஜனமென்ன வென்றால், நமக்கு சுயமாக வேண்டிய காரியங்களை அகத்தியம் பார்த்துக்கொண்டும், அதோடு நில்லமால், அதற்குமேலும் நமக்குச்சகோதரர் என்று சொல்லத்தகும் நம் நாட்டாரிடத்தும் பரோபகார சிந்தை பூண்டொழுகுவதே. இதுவே மேன்மையான நோக்கம். இதற்காகவே, நாம் இந்தமானிட உடம்பைப் பெற்றது. இதற்காகவே, கடவுள் நம்மை மற்ற ஜீவராசிகளிலும் மேலாக சிருஷ்டித்தார். ஆகையால்,

எள்ளளவேனும் அப்பரோபகாரசிந்தை யில்லாதவனாய், தானே உண்டு, உடுத்து, உறங்கி நத்தைபோல் தனக்குள்ளே ஒடுங்கித் திரிகின்ற பேதையை இரண்டுகால் மிருகமென்று சொல்லத் தடையென்ன? அப்படிப்பட்டவனுக்கு எவ்வளவுதான் தெய்வபக்தி யிருந்தாலும், ஈசன் அவனுக்கு முழுவருள் செய்வதரிது. ஏனெனில், உலகர் தனக்குச்செய்யும் பூஜையில் ஈசன் தனது ஆத்மகோடிகளிடத்திற் காட்டும் பேரன்பையே முக்கியமான அம்சமாகக் கொள்ளுவார். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் காரியத்தை மாத்திரம் நாடிக்கொண்டிருந்திருப்பரானால் உலகம் அன்றே நின்று போயிருக்கும். ஏனெனில், திருடருக்கும் தீயருக்கும் உலகம் உட்பட்டால், அது எத்தனைநாள் வாழ்வுகொண்டு செல்லும்? அப்புறம் நீதி எங்கே, பொது நன்மைஎங்கே, க்ஷேமம் எங்கே? இப்போது நமது பொருளைப் பிறன் அபகரிக்காமலும், நம்மைப் பிறன் வருத்தாமலும், நம்மைக்காப்பாற்றும் கூட்டத்தாருக்கே, நாம் ராஜாங்க மென்றும், சர்க்காரென்றும், கவர்ன்மெண்டென்றும் பெயர் வழங்குகிறோம். சர்க்காரென்பது, உலகநடபடி யறிந்து, பொது நன்மைக்கேற்ற சட்டதிட்டங்களேற்படுத்தி நீதி செலுத்துவோருடைய கூட்டம்; இதுபோலவே, வியாபார மென்பது கூட்டுத்தொழில், படையென்பது படைவீரர் கூட்டம், வித்தையிருப்பது வித்வான்கள் கூட்டத்தில், சங்கமென்பது ஏதாவது பொதுநன்மை நாடினவர் சமுகம், உலகமென்பதே அறிவுடையோர் கூட்டம். எவ்விஷயத்திலும், பலபேர் மனமொத்துக் கூடி உழைத்தால்தான், காரியம் கைகூடும். ஒரு விறகை யொடித்தாலும் ஒரு கட்டு விறகை யொடிப்பதரிது. ஒருவர் அபிப்பிராயம்செல்லாதாயினும், சபையோர் மனமெல்லாம் ஒத்துக்கூடிப் பொது நன்மை மேற்கொண்டு நின்றால், அந்த நன்மையை உலகம் ஏற்று நடத்தும். இன்னும் சங்கங் கூடுவதனால், மனக்கலப்புண்டாகும், ஒற்றுமை ஒத்துக்கூடும், ஊக்கம் ஓங்கி வளரும், சிறுமை சிறுகிப்போகும், அநீதி அகன்றுபோகும். பொறாமை பொறாமலோடும், மோசம் நாசமடையும், உண்மை உள்ளபடி வெளிப்படும், தர்மம் தலையெடுக்கும், மதம் வல்லமைபெறும், கலை கலைபோல் வளரும், தொழிலே சுகந்தரும், வாக்கு வல்லமைபெறும், எடுத்தகாரியம் அடுத்துக்கூடும், கல்வி கசடறும், செல்வம் செழிப்படையும், பாஷை படர்ந்தோங்கும், தேசம் க்ஷேமமடையும், அறிவு அகழங்கொள்ளும், அன்பு அடியுறைக்கும். கண்ணியம் கைகூடிவரும், புண்ணியம் பூர்த்தியாகும், நன்மை மேன்மேல் வளரும், ஜன்மம் ஸபலமாகும். இன்னும் இவைபோன்ற அளவிறந்த நன்மைகளை ஒருங்கே தரும்படியான இத்தகையசங்கங்களின் பெருமையை யாரால் விவரிக்கமுடியும்? இப்போது இந்தியாவில் நமது இந்துமதத்தைக் காப்பாற்றவும் நிலை நாட்டவும் கூட்டம்கூடியிருக்கின்றார்கள். அன்றியும், இராஜாங்க விஷயத்திலும் இந்துக்களாகிய நமது குறைகளை யெடுத்துக்கூறக் 'காங்கிரஸ்' என்னும் மகாசபை கூடியிருக்கிறார்கள். ஆனால், இவ்விரண்டிற்கும் இன்றியமையாத சாதனமாயும், இரண்டிற்கும் முந்திநிலைபெற வேண்டியதாயு மிருக்கின்ற சுதேசபாஷாபிவிர்த்தி விஷயமாக இதுகாறும் கூட்டங்கூடக்கேட்டிலோம்! அந்தோ! இது மிகுந்தபரிதாபம்! பரிதாபம்! இப்போது எங்கும் அங்கிலேயம் அபரிமிதமாகப் பரவிவருவதனாலும், சுதேசபாஷைகள் ஆதரிப்பாரின்றி அதோகதியாய்க்கைதாழ்ந்துவருவதனாலும், அவைகளை இப்போதாவது நாம் கைகொடுத்து, நிலைநிறுத்தி, வளரச்செய்யாவிட்டால் நமது தேசத்திற்கும், மதத்திற்கும், ஆசாரவொழுக்கங்களுக்கும், உற்றார், பெற்றார், பெண்டு, பிள்ளை, பந்து, மித்திரர் அனைவருடைய சுக ஜீவனத்திற்கும் பெரு மிடையூறு நேருமாதலாலும், நமது முன்னோர் தமிழ்பாஷையை ஆதரித்துப் பெருமைப்படுத்தி வந்து அதை அருஞ்செல்வமாக நம்மிடம் இப்போது ஒப்புவித்ததற்கு, அதை நம்மாலியன்ற மட்டும் ஆதரிக்க வேண்டியது நமக்குப்பெருங் கடமையாகலாலும், அப்படிச் செய்யா திருப்போமானால், அது நாமே நமது முன்னோரை இகழ்ந்ததற்கும், நாம் புறதேசத்தார் முன்னிலையில் கூசாமல் எழுந்து நிற்கக் கூடிய தனியோக்கியதையுமற்ற கோழைகளானோ மென்பதற்கும் ஒப்பாகின்றதாலும், சுயபாஷாபிமானமில்லாதவர் பெருமையும் உலகத்தில் ஓர் பெருமையாகாததனாலும், தன் பாஷையைக் கைவிடுதலும், உண்ட வீட்டிற் கிரண்டகம் செய்தலும் ஒன்றுபோல நிந்திக்கப்படுமாதலாலும், இந்துக்களே, இனி இப்பாஷாபிவிர்த்தி விஷயமாகவும் விரைவில் கூட்டங்கூடி முயற்சி செய்தல் எவ்வளவும்அவசியம்! அவசியம்! இது செய்யாவிட்டால் நாம் இந்துக்கள்என்ற பெயர் தரித்திருப்பது ஒரு அழகுமல்ல, மற்றப்படி நமக்கு ஒரு சுகமும் கிடைக்கப்போகிறதில்லை! இது சத்தியம்! சத்தியம்!

கனவான்களே, இவ்வளவு முக்கியமான பாஷாபிவிர்த்தி விஷயமாய் இங்கு சங்கஞ்சேர்ந்து முயற்சி செய்து வருவதைக்கேட்க இந்துக்களாகிய யாவருக்கும் உண்மையான ஆனந்தத்தை விளைவிக்கும் என்பது நிச்சயம். இச்சங்கம் என்றென்றைக்கும் மேன்மேலும் வளர்ச்சியுற்றுத் தமிழுலகத்திற்கு விளக்குப்போலிருந்து அறிவும் இன்பமும் பரப்பிநிற்க யாதும் வல்ல பராபரன் அருள் புரியும்படிஎளியேன்பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன்.

இவ்வுபந்நியாசத்தை முடிவு செய்யுமுன் தமிழ் பாஷாபிவிர்த்திக்கு இதில் விரித்துக்கூறிய மார்க்கங்

கள் இன்னவையென்று ஞாபகத்திற்காக இங்குநான் சுருக்கிச்சொல்ல அநுமதிகொடுங்கள்:—

(க). நமது நாட்டுச் சிறுவர்களுக்கு உயர்ந்த தரத்தில் தமிழ்ப்பயிற்சி செய்விக்க, தகுந்த ஏற்பாடுகளுடன் தமிழ்ப் பாடசாலைகளை எங்கும் ஸ்தாபித்தல்.

(உ). பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ஏற்படுத்தியிருக்கும் 'யூனிவெர்ஸிற்றி' அல்லது சர்வகலாசாலை சம்பந்தமாக இருக்கும் அங்கிலேய பாடசாலைகளில் இப்போது தருவதைப்பார்க்கிலும் அதிகமான தமிழ்ப் பயிற்சி தருவிக்கக் கேட்டுக் கொள்ளுதல்.

(ரு). உலகத்திற்கு இதுகாறும் மறைபொருளாக இருந்துவரும் பழய அரிய தமிழ்க் கிரந்தங்களைச் சேகரித்து அச்சிட்டு வெளிப்படுத்தல்.

(ச). அங்கிலேயபாஷையில் ஜடசாஸ்திர சம்பந்தமாகவும், சரித்திரமுதலிய இதரசம்பந்தமாகவும்இருக்கும் நூல்களை அங்கிலேயமும் தமிழும் தெரிந்தவரைக் கொண்டு தமிழில் மொழி பெயர்க்கச்செய்தல். நூதனமாகத் தமிழில் வசனகாவியங்கள் எழுதிப் பெருக்குதல்.

(ரு). அப்படி இயற்றப்பட்ட நூதனகிரந்தங்களைப் பாடசாலைகளிற்பாடமாகஏற்படுத்தியாவது,அல்லது, மற்றெவ்விதத்திலாவது, பரவச்செய்து அக்கிரந்த கர்த்தர்களை யாதரித்தல்.

(சு). தமிழுலகத்தில் முக்கியமான இடங்களிலெல்லாம் தமிழ் அச்சுக்கூடங்களை ஸ்தாபித்தல்.

(எ). தமிழ்ப் பத்திரிகைகளை நடாத்தித் தமிழுலகத்தில் எங்கும் பரவும்படி செய்தல்.

(அ). ஊர்தோறும் தமிழ்ப் புஸ்தகால்யங்கள், அல்லது, புஸ்தகஸ்தாபனங்கள் ஏற்படுத்தி ஜனங்களை எளிதில் வாசிக்கத் தூண்டுதல்.

(கூ). தமிழ்ச் சங்கங்கள் கூட்டி, பிரசங்கம், தர்க்கம், உபந்நியாசம் முதலியன நடத்துதல்.

இவ்வாறு விவரித்து முடிக்கப்பட்ட ஒன்பதுமார்க்கங்களும் தமிழுலகத்தில் சுயபாஷாபிமானமுடைய தனவான்களாலும், சாமான்னியராலும், தங்களாலான அளவிற்கெல்லாம் ஆதரிக்கப்பட்டு நடந்தேறி வருமானால், தமிழ்பாஷை, வளர் பிறைபோல, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய்,வளர்ந்து வருமென்பதற்குச் சந்தேகமில்லை. இது, பார்த்தால், மலையொத்த வேலையாகத் தோன்றும். ஆகில், முயற்சியுடையோருக்கு எதுதான் பெரிது? ஒன்றுமில்லை. கேவலம் சிட்டுக்குருவிகள் சேர்ந்து, ஒரு கடலை வற்றச்செய்யுமானால், இதுவோ நம்மவருக்கு ஒரு பிரமாதம்? புறதேசங்களிலெல்லாம் சுதேச நன்மைக்காக தங்கள் உயிரையே பலிகொடுக்கும்உத்தம சிலர் அனந்தம்பேர் இருப்பரானால், இதுவோ நம்மவருக்கு ஒரு பிரமாதம்? ஆகையால், ஒவ்வொரு தமிழ் பாஷாபிமானியும், இம்மார்க்கங்களை நெஞ்சத்தில் ஆழப்பதித்து, அமிழ்தக்கடலாகியதமிழ்பாஷையை தான் பேசினதற்கும், தமிழுலகத்தில் தான் பிறந்ததற்கும், இவ்வளவும் தன்தலைமேற் பொறுத்த சுமையாக எண்ணி, தன்னால் அத்தனையும் நடத்தி முடியாவிடினும், இவைகளில் ஏதேனும் ஒரு மார்க்கத்தையாவது ஆதரித்து, அதற்குத் தன்னாலான முயற்சியாவும் செய்துகொண்டும், தனதுநேசத்துக்கெட்டின பிறரிடத்திலெல்லாம் இவைகளைப்பற்றி அடிக்கடி விடாமுயற்சியுடன் தூண்டுதல் செய்து கொண்டும் வந்தால், பார்த்தவுடன் மலைப்பைத் தருவதாகிய இந்த மலையும் அசைந்து மறைவதைக்காணலாம். இப்போது தமிழுலகம் இருக்கும் நிலைமையை உற்றுப் பார்க்கும் ஒவ்வோர் உண்மையான பாஷாபிமானிக்கும் உள்ளம் உருகாமலிராது, அதை நிவிர்த்திக்க உற்சாகம் தோன்றாமலிராது. பணமும் இதற்கு ஒரு பொருட்டோ? பணத்தைத்தீ கொண்டுபோகக்காண்கிறோம், தீயர் கொண்டுபோகக்காண்கிறோம், பெண் கொண்டு போகக்காண்கிறோம், மண்கொண்டுபோகக் காண்கிறோம். குளம்,சத்திரம்,அநியாயவாதிகள், மத்தாப்பு, நகைக்கிடமாகின்ற நகை,வெறும்பட்டப்பேர்,சதிர்,பாணம், சீட்டு, சித்திரம், புகையிலை, விருந்து,குடி,வேடிக்கை முதலிய அனந்தங்காரியத்திற்குப்பணத்தைத் தண்ணீர்பட்டபாடாய்ச் செலவிடக் காண்கிறோம். ஆகில், தமிழ்மாதை ரக்ஷிக்மாத்திரம் (அவள் இதற்கெல்லாம் தாழ்ந்துபோகும்படி என்ன பாவம் செய்தாளோ!) நூறுரூபாயில் ஒரு பைசாவேனும், செலவாகின்றதைக் காணோமே! இதென்ன ஆச்சரியம்! இதென்ன வெட்கக்கேடு! உலகத்திற்கெல்லாம் நன்மைபயக்கும் இந்தப் பேருபகாரத்தை நடத்தினால், அவ்வுபகாரிகள் அதனால் கெட்டுப்போவார்களோ? அப்படியே கெட்டுப்போவார்களென்று வைத்துக் கொண்டாலும்,

"ஒப்புரவினால் வருங்கேடெனின் அஃதொருவன்
விற்றுக் கோட்டக்க துடைத்து."

என்று தெய்வத்திருவள்ளுவர் உபகாரம்செய்வதனால் ஒருவனுக்கு கேடு வருமாகிலும் அக்கேட்டுக்காகஒருவன் தன்னையே விற்றுக்கொள்ளலா மென்றும் சொல்லி யிருக்கவில்லையா?

(இன்னும்வரும்)

தி. லக்ஷ்மணபிள்ளை.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

என் அருமைத் தோழிகளே,

நான் சென்ற மாதத்தில் நம்முடைய தோழர்களிடம் சென்றிருந்தபோது அவர்களுக்கு 'ஒருவரும் கெர்வங் கொள்ளலாகாது' என்பதைக் குறித்து ஒரு கதைசொல்லி அவர்களைச் சந்தோஷிப்பித்து அவர்களிடம்விடைபெற்றுக் கொண்டு, உங்களிடம் வந்து என்னகதை சொல்லலாமென்று யோசித்து வரும் வழியில் என்னுடைய சிநேகிதர் ஒருவர் வீட்டுத் தெருத் திண்ணையில் அவருடன் லோகாபிராமமாய் வார்த்தையாடிக்கொண் டிருந்தேன். அப்போது அவ்வீட்டுக்கு எதிர்வீட்டில் ஒரு இரைச்சல் கேட்டது. நான் அதென்னவென்று எனது நண்பரைக் கேட்க, அவ்வீட்டுக்காரர் ஏதோ தகுந்த உத்யோகத்தில் இருந்ததாகவும், அக்காலத்தில் லஞ்சம் வாங்கினதாகவும் அதற்கு அவர்மனையாளே மூலமா யிருந்ததுமன்றி தன் பர்த்தாவுக்கு லஞ்சங்கிடைத்த பெருமையைத் தனக்கு மிகவும் சிநேகமான ஒருத்தியிடம் சொல்லிக்கொண்டதாகவும், அது அந்த ஸ்திரீயின் மூலமாய்ப் பரவக், கடைசியில் அவ்விஷயம் அதிகாரிகளுக்குத் தெரிந்து லஞ்சம் வாங்கினவரை விசாரணைக்குக் கொண்டுவந்து அவரைக் குற்றவாளியென்று கண்டு அவரைப் பிடிக்கவாரண்டுவிட, அவர் அவ்வாரண்டுக்குப் பயந்து வீட்டைவிட்டு வெளிப் புறப்படாமல், தான் வீட்டிலிருப்பதை எவருக்கும் அறிவிக்காதிருக்கும்படி தன் மனையாளுக்குத் திட்டஞ் செய்து ஒளித்திருந்ததாகவும், இப்படி யிருக்கையில் வாரண்டுச் சேவகர் வந்து அவர் மனையாளைக்கண்டு அவளையும் நியாயஸ்தலத்துக்கு இழுப்பதாய்ப் பயப்படுத்தினதாகவும், அதன்மேல் அந்தம்மாள் தன் கணவனை அவர்களுக்குக் காட்டிக்கொடுத்து விட்டதாகவும் சொல்லி அதன்விஷயமாய் அவ்விரைச்சல் உண்டாயிற்று என்று என்னுடன் பேசிக்கொண்டிருந்த சிநேகிதர் சொன்னார். அதைக் கேட்டவுடன், இது நல்ல சரக்குத்தான் என்றுஎண்ணி இதை உங்களுக்குத் தெரிவித்து, இதை யொட்டிய ஒரு சிறுகதையையும் உங்களுக்குச்சொல்லலாமென்று வந்தேன்; கேட்க உங்களுக்கு உத்ஸாகமும் அவகாசமும் உண்டோ?

தோழிகள்.—குட்டியண்ணா, என்ன அப்படிக் கேட்கிறீரே. பால்குடிக்கக் கால்பிடிப்பாருண்டா? கரும்புதின்னக் கைக்கூலியா? உம்முடைய ஸரஸமான மாதிரியும் சாதுரியமான வார்த்தையும் எப்போது கிடைக்கும் என்று உமது வரவை எதிர்பார்த்திருக்கும் எங்களுக்கு இதைவிட வேறு என்னலாப மிருக்கிறது? அதை அவசியம் சொல்லவேணும்.

குட்டியண்ணா.—நல்லது, கேளுங்கள்: நான் உங்களுக்குச் சொல்லப்புகும் கதை

ஸ்த்ரீபுத்திஃப்ரளயாந்தக:

என்னும் நீதியை உட்கொண்டது: நிலவளம் நீர்வளம் முதலிய பலவளங்களும் நிறைந்து சகல சௌக்கியங்களும் பொருந்திய தென்தேசத்தில் மதனபாலன் என்றொரு இராஜனிருந்தான். அவன் அரசாண்ட நகரத்தில் த்ரய்யந்த சாதுர்வர்ணச்ரம ஏகோநஷடங்க ஸப்தகாண்ட ஸஹஸ்ராவர்த்தி சங்கரநாராயண சாஸ்திரி என்றொரு பிராமணோத்தமர் உண்டு. அவருக்கு, இராஜனுக்குப் பிரதிதினமும் பஞ்சாங்கம் படித்து தினபலன் சொல்லிவருவது உத்தியோகம். இப்படி அவர் பிரதிதினமும் பஞ்சாங்கம் படித்துப் பலன்சொல்லி வீட்டுக்குத் திரும்பும்போது "ஸ்த்ரீபுத்திஃப்ரளயாந்தக:" என்று சொல்லிவிட்டு வருவது வழக்கம். இப்படி அவர் அநேகவருஷ காலமாய், அரசன் தன் பத்நியோடு வீற்றிருக்கும்போது சொல்லிக் கொண்டுவருகிறார். ஒருநாள் பிராமணன் வழக்கப்படிப் பஞ்சாங்கம் ஓதிப் பலன்கூறி 'ஸ்த்ரீபுத்திஃப்ரளயாந்தக:' என்று சொல்லிப் போனதைக்கேட்டு இராஜபத்நி மனம்வருந்தி இராஜனைநோக்கி, இந்த ப்ராமணன் பிரதி தினமும் அப்படிச் சொல்லிப்போகிறாரே அதன் உண்

மையை அறியவேண்டு மென்றுசொல்ல, அரசனும் மறுநாள் வேதியர் வந்து பஞ்சாங்கம் படித்து அவ்வாக்யத்தை வழக்கம்போல் சொல்லித் திரும்புகையில் அவ்வந்தணரைப் பார்த்து, நீர் தினமும் 'ஸ்த்ரீபுத்திః ப்ரளயாந்தகః' என்று சொல்லுகிறீரே அதன் கருத்தென்ன வென, பிராமணர் இராஜசேகரா, ஸ்திரீகளின் புத்தியைக்கேட்டு அதன்படிநடந்தாலும் அவர்களை நம்பினாலும் மோசம் வருமென்பது தான் அதன் கருத்து என்ன, வேந்தன் அது உண்மை தானோ என்ன, பிராமணன் உண்மைதானென்ன, அப்படியானால் அவ் வுண்மையை இன்றுமுதல் எட்டுநாளுக்குள் எனக்குக் காட்டத்தவறுவீரானல்உமக்கு விட்டிருக்கும்மான்யங்களைப் பிடுங்கிக்கொண்டு உம்மையும் நாட்டைவிட்டு ஓட்டிவிடுவேனென்று இராஜன் கூற, அப்படியே காட்டுகிறேனென்று உறுதி கூறி கிருகத்துக்குப் போய்விட்டான்.

பிறகு ப்ராமணன் ஒருநாள் தன்மனையாளை அழைத்துச் சொன்னது, 'அடீ! நான் உன்னோடு ஒரு ரகசியம் சொல்லுகிறேன். அதையொருவரோடும்சொல்லாமலிருப்பையா?' என்றான். அவள் 'என் கண்ணேடுபிறந்த கண்ணுட்டியானாலும் சொல்லமாட்டேன்' என்று உறுதிசொன்னபின்பு வேதியன் சொன்னதாவது: நமது அரசனுக்கு மகத்தான ஆபத்து வரப்போகிறது; அதற்கு அடையாள மென்னவென்றால், வருகிற வெள்ளிக்கிழமை இராத்திரி 12-மணிக்கு அரண்மனை உப்பரிகைக் கலசத்தில் ஒரு வெள்ளைக்காக்கைவந்து உட்காரும். அந்தச் சமயத்தில் யாராவது விழித்திருந்து ஒரு முகூர்த்தகாலத்தில் அரண்மனையை இடித்துத் தூளாக்கித் தரையோடு தரையாய் சமமாக்கிவிட்டால் அரசனும் அவன்குடும்பமும் பிழைக்கலாம்; இல்லாவிட்டால் பொழுது விடிவதற்குள் அரசன்மாளிகை இடிந்து வேந்தனும் அவள் பத்நியும் அவனைச்சேர்ந்த ஜனங்களும் இறந்து போவார்கள் என்று சொன்னான். இதைக் கேட்டவுடனே அந்த வைதிகன் பெண்டாட்டி இந்த ஆச்சரியமான சங்கதியைத் தனக்கு அத்யந்தம் பிராணஸ்நேகிதையான அடுத்தவீட்டுக் கல்யாணிக்கு ரகஸ்யத்தில் சொல்லி அதை வெளியிட்டால் தலை போய்விடுமாதலால் வெளியிடாதே யென்று திட்டஞ் செய்தாள். அவளும்'ஆ! எங்கேயாவதுண்டா? ரகஸ்யத்தை வெளியிடுவேனா?' என்று உறுதி கூறிப் போய்விட்டாள். பின்பு அவளுக்கும் அந்த ரகஸ்யத்தை யாரோடாவது சொன்னாலொழிய பொறுக்கமுடியாமல் வயிறு உப்பிப்போகவே அவள் தனக்கு மிகவும் ப்ராணபதமான ஒருத்தியோடு சொல்லிவிட்டு அதை வெளிப்படுத்தாமலிருக்கும்படி வேண்டிக்கொண்டாள். அவளும் அப்படியே தனக்கு வேண்டிய மற்றொருத்திக்குச் சொன்னாள்; அவள் தனக்கு ப்ரியமான வேறொருத்திக்குச் சொன்னாள்; இவ்வாறேபோய் முடிவில் மந்திரி பெண்சாதிக்கு எட்டியது. அவள் இராஜபத்நிக்கு அந்தரங்கத் தோழியாகையால் அவளுடன் சொல்லி வைத்தாள். இராஜஸ்திரீ அந்த அதிரகஸ்ய அதிசய அர்த்தத்தை பள்ளியறையில் தன் பர்த்தாவோடு சொல்லி அது சம்பவிக்கவேண்டிய காலம் அன்றையதினம் இரவேயாதலால் உடனே அவ்வபாயத்தை விலக்கப் பிரயத்தினப்பட வேண்டுமென்று தெரிவித்தாள். இராஜன் மிகவும் கவலையுற்று, இன்னும் ஒரு முகூர்த்த காலந்தானே இருக்கிறதென்று வருந்தி, உடனே படுக்கையைவிட்டு மனைவியை அப்புறப்படுத்தி, தான் வெளியில் வந்தான். இதற்குள் பஞ்சாங்கப்ராமணன் தான் சொன்ன சங்கதி கிரமக்ரமமாய்ப்போய் அரசனுக் கெட்டியது என்று அறிந்து உடனே ஒரு வெளுப்பு வஸ்திரத்தால் காக்கைபோல் ஓர் உருச்செய்து அரசன் மாளிகை உப்பரிகைக் கலசத்தில் வைத்துவிட்டு வந்து, நடக்கும் விநோதங்களைப் பதுங்கிப்பார்த்துக் கொண்டிருந்தான். இது இப்படியாக, வெளியில் வந்த வேந்தன் உப்பரிகை மேல் பார்க்கையில், நிலாவெளிச்சமாகையால் ஒருவெள்ளைக்காக்கை யிருப்பது தெரிந்தது. தக்ஷணமே தானேபோய் ஆயிரம் ஆள்களைக் குந்தாலி, கூடை, கோடரி, மண்வெட்டி, பாரை இவற்றோடு கொண்டுவந்து அரண்மனையை யிடித்துத் தவிடுபொடியாக்கச் சொல்லவே, அவர்களும் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் அதைப் பொடிசூர்ணமாக்கித் தரையோடு தரையாய்ச் சமப்படுத்தி விட்டார்கள்.

பொழுதும் விடிந்தது. மந்திரிவழக்கம்போல் அரண்மனைக்கு வந்தான். அரண்மனை நின்ற விடம் சமபூமியாய் அரண்மனையிருந்த அடையாளமேயில்லாமல் போகவே, உடனே அரசனைத்தேடிச் சென்றான். அரசனோ ஒருசிறு குடில் வேய்ந்துகொண்டு ஓர் ஒதுக்கிடத்தில் இருக்கக்கண்டு, இதென்ன விபரீதம்? இதுயார் செய்கை? என்று கேட்க, இராஜன் சொல்லுகிறான்: பாரும் மந்திரீ, "மந்திரிக்கழகு வரும் பொருளுணாத்தல்" என்றபடி இனிவரப்போகிற விஷயங்களை முன்னாடியே தெரிந்து அதற்குத் தகுந்த உபாயங்கள் செய்ய வேண்டியது மந்திரியின் தொழிலா யிருக்க, நீர் இதைச்சிறிதும் கவனிக்காமல், 'ஸ்வகாரியதுரந்தர: ஸ்வாமிகாரியம் 'வழவழ' என்பதுபோல் நீர் உமது சொந்த சுகத்தைத் தேடுவதிலே நோக்கமுடையவராயிருக்கிறீர். நான் ஜாக்கிரதையாய் இருந்து இந்தக் காரியம் செய்யாவிடின் இராஜன் எங்கே? இராஜ்யமேது? எல்லாம் சூன்யமாய்ப் போயிருக்குமேயென்று நடந்த சங்கதியை மந்திரிக்குச் சொன்னான்.

பிறகு மந்திரி இப்படியும் இருக்குமா என்று, மகாராஜனே, தமக்கு இந்த சங்கதி சொன்னவர் யாவர்? என்ன, அரசன் தன் பத்னி சொன்னதாகச் சொல்ல, அவளுக்குத் தெரிந்ததெப்படி யென்று விசாரிக்கையில் தன்மனையாள் சொன்னதாகவும், அவளுக்கு ஒருத்தி சொன்னதாகவும், அவளுக்கு மற்றொருத்தி சொன்னதாகவும், அவளுக்கு வேறொருத்தி சொன்னதாகவும் அப்படியே விசாரித்துப் போகையில் பஞ்சாங்கப்பார்ப்பாத்தி சொல்லியதாகத் தெரிய, அவளைக் கேட்டபோது தனக்குத் தன் பர்த்தாவே சொன்னதாகச் சொல்லினாள். இந்த அஸம்பவமான சங்கதியைக் கட்டிவிட்ட ப்ராமணனைப் பிடித்து வரும்படி கட்டளையிட, வேதியனும் இராஜசமுகத்தில் போய்ச் சேர்ந்தான். போனவுடன் இராஜனைப்பார்த்து 'ஸ்திரீபுத்திঃ ப்ரளயாந்தகঃ' என்றான். அரசன் ப்ராமணனை நோக்கி என்னசங்கதி என்று கேட்க, பிராமணோத்தமன் அரசனிடத்தில் 'ஸ்திரீபுத்திঃ ப்ரளயாந்தக:' என்றதும், இராஜன் அதன் உண்மையைக் காட்டாவிடின் தண்டனை நேரும் என்றதும், அதன்மேல் தான் இந்த சங்கதியைக் கட்டித் தன் மனைவியிடம் சொன்னதும்; அது அவள் மூலமாய் வெளிப்பட்டு இராஜபத்நி யிடம் வர, அவள் பேச்சைக் கேட்டு அரசன் அரண்மனையை யோசனையின்றி அழித்துவிட்டதும் கூறி, தான் அமைத்துவைத்த மாயவஸ்திரக் காக்கையைக் கண்டெடுத்து இராஜனுக்குக் காட்ட, அரசன் ஆச்சரியமும் லஜ்ஜையும் அடைந்து, ப்ராமணன் சொல்லிய 'ஸ்திரீபுத்திঃப்ரளயாந்தகঃ' என்பது உண்மைதானென்று அறிந்து நமது த்ரய்யந்த சாதுர்வர்ணாச்ரம ஏகோந ஷடங்க ஸப்தகாண்ட ஸஹஸ்ராவர்த்தீ சங்கரநாராயண சாஸ்திரீக்கு வேண்டிய வெகுமதிகளைச் செய்து ஸன்மானித்தான்.

கேட்டீர்களோ என் அன்பிற்குரிய அருமைச் சிறு தோழிகளே, ஆகையால் நீங்களும் ஒருவர்க்கொருவர் ரகஸ்யங்களை வெளிவிடாமல் ஒற்றுமையாய் வாழ்ந்து வருவது மல்லாமல், நீங்கள் உங்கள் கணவனோடு வாழுங்காலத்தில் குடும்ப ரகஸ்யங்களை வெளியிடாமல் பர்த்தாவுக்கு அநுகூலையான பார்யையா யிருந்து அவன் இல்வாழ்க்கைக்கு நல்வாழ்க்கைத் துணையாயிருக்கப் பாருங்கள். நல்லது, நேரமாகிறது, இம்முறை நாம் கூடிச் சல்லாபித்தது போதும்; போய்வருகிறேன்.

உங்கள் அன்புள்ள
குட்டியண்ணா.

---

சுத்தம்.

என்தோழர்களே! பெரும்பாலும் நாட்டுப்புறத்துப் பாடசாலைகளில் வாசிக்கும் மாணாக்கர் தாங்கள் கட்டிக்கொள்ளுந்துணி அழுக்காயிருப்பது மன்றி தங்கள் தேகத்தையும் அழுக்காய் வைத்திருக்கிறார்கள். இதனால் விளையுங் கெடுதி பிள்ளைகளுக்குத் தெரியாததுந் தவிர, அவர்கள் தகப்பன் மார்களுக்கே தெரியவில்லை. அசுத்தமுதலிய கெட்ட செய்கையினால் வரும் நோய்களை நாம், விதியினால்வருகிறது என்று வீணான நினைவுகளை நினைத்துக்கொண்டு அலைகிறோம். விதியொரு பக்க மிருக்கட்டும். மதியீனத்தால் வருவதற்குச் சில உதாரணங்கள் சொல்லுகிறேன்.

ஒரு மரமாவது ஓலையாவது ஓரேஇடத்தில் இருக்கும்போது மண்ணுப் மட்கிப்போய்விடக் காண்கிறோம். (அதுபோலவே) மேலும் நம்முடைய தேகம் மெல்லியதாகையால் அழுக்குச் சேரச்சேர உடம்புகன்றி (நொந்து) புண்ணுகிறது. அன்றியும், நமதுதேகத்தின்மேலுள்ள கண்ணுக்குத் தெரியாத மயிர்த்துவாரங்கள் அந்த அழுக்கினுல் மூடி (தேகத்துக்குள் இருக்கப்பட்ட அழுக்குகள் வேர்வை மூலமாய் வெளியேவருவதுவழக்கமாகையால்) அவ்வழுக்குகள் வெளியேவர, வழியில்லாமல் உள்ளேயே தங்கி, இரத்தத்தை அசுத்தியாக்குவதால், குடல் முதலிய மெதுவான அவயவங்களை புண்ணுக்கி விடுகின்றது. உள்ளே புண்ணுகவே வெளியிலும், புண் முதலிய அநேக வியாதிகளும் உண்டாகின்றன. ஒரு சுரைக்கொடியில் வேரில் கொஞ்சம் பின்னமாக்கிவிட்டால் அந்தச் செடியிலிருந்து நாலாப்பக்கமும் ஓடியிருக்கும் கொடிகள் காய்ந்துபோகின்றனவல்லவா? நம்முடைய தேகத்திலுள்ள உறுப்புகளும் ஒன்றை ஒன்று ஒட்டி கிளைகள்போ லிருக்கிறபடியால் அவைகளில் எதற்காவது கொஞ்சம் தீங்குநேரிட்டால், எல்லா அவயவங்களுக்கும் கெடுதி உண்டாகிறது. ஆகையால் நாம் தினந்தோறும் உடம்பை நன்றுய்த் தேய்த்துக் குளிக்க வேண்டும். குளிக்கும்போது சோப்புக்கட்டியை உபயோகப்படுத்துவது மிக நல்லது. நாம் கட்டிக்கொள்ளுகிற துணிகளில் அழுக்கிருந்தால் மேற்சொன்ன மயிர்த்துவாரங்களில், துணிகளிலிருக்கிற அழுக்கு மூடிக்கொண்டு மேற்சொன்ன கெடுதிகள் நேரிடுகின்றன. ஆகையால் நாம் உடுத்துக்கொள்ளும் உடைகளெல்லாம் சுத்தமாயிருக்க வேண்டும்.

கல்வாய்
அப்பர்ப்ரைமெரி
பாடசாலை,
20-9-92.

உங்கள் நேசன்
வீரரத்தின வர்ம
பாலகிருஷ்ண நாயகர்.

---

## அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி.)

## உபகார சங்கம்.

**எடப்பள்ளி.** நமது எடப்பள்ளி உபகாரியிடமிருந்து வந்த பின்வரும் ரிபோர்ட்டு சென்றமாத சஞ்சிகையில் பிரசுரிக்க மிகத்தாமதித்து வந்ததால் அதை இம்முறை பிரசுரிக்கிறோம். விவேகசிந்தாமணியில் பிரசுரிக்க ரிபோர்ட்டனுப்பும் நமது உபகாரிகள் அந்தந்தமாதம் 20உயில் அனுப்பினுல் பிரசுரிக்கச் சரியானகாலத்தில் வந்துசேரும்.

"ஐயா, நான் இந்த மாதத்தில் செய்த வேலையைத் தங்களுக்குத் தெரியப்படுத்தக் கட்டுப்பட்டபடி ஒருவாறு சுருக்கமாய் எழுதுகின்றேன்.

முதல் ஞாயிற்றுக்கிழமையதினம் படுகர் ஊர்களாகிய நடுஹட்டி, பெத்தளா, கல்லட்டி, கூக்கல் முதலிய கிராமங்களுக்கும், மூன்றும் ஞாயிற்றுக்கிழமை பெல்லிக்கம்பை, தூனேரி, கொதமுடி முதலிய சில ஊர்களுக்கும் சென்று அங்கங்கே கூட்டங்கூடி உட்கார்ந்துக்கொண்டு குதர்க்கங்களைப் பேசி பொழுதுபோக்குகிற ஜனங்களைத் தடுத்து, அறிவைப்பெற்று விவேகத்தையும் நாகரீகத்தையும் அடைய அவசியமானவைகளைப் பற்றியும் விவேகசிந்தாமணியின் வரலாற்றைப்பற்றியும் பிரசங்கங்கள் செய்துக்கொண்டுவந்தோம். கொதமுடி, கூக்கல் என்னும் ஊர்களில் மட்டும் விசேஷ கூட்டங் கூடினுர்கள். சாதாரணமாய் இந்த படுகர் ஊர்களில் கிருஸ்துமதப் பிரசங்கிகள் அடிக்கடி வந்து உபந்நியாசங்கள் செய்துபோவது வழக்கமாதலால் எம்மையும் முதலில் அங்ஙனம் எண்ணி, என் பிரசங்கங்களை வெறுத்தும், இகழ்ந்து பேசவும் ஆரம்பித்தார்கள். இவர்கள் கல்வியறிவில்லாதவர்க ளாதலால் என் நெற்றியிலுள்ள அடையாளத்தைக் கண்டும் சொல்வதற்குமுந்தி என்னை இம்மதஸ்தன் என்று நிச்சியித்தார்களில்லை. இதற்கும் காரணம் சென்ற மாதத்தில் தூனேரி என்னும் கிராமத்தில் இரு சிறுவர்கள் கிருஸ்துமதத்தைத் தழுவிக்கொண்டதே. பிறகு என் பிரசங்கத்தைக்கேட்க ஆவலுள்ளவர்களாகியும் கவனத்தைச்செலுத்தினவர்களாகியும் உற்சாகத்துடன் கேட்டு ஆனந்தத்தையடைந்தார்கள். பிரசங்கம் செய்வதில் சற்றும் வல்லமையில்லாத எனக்கு 'விவேக சிந்தாமணி' என்னும்அருமைப்பத்திரிக்கை, தோழனுகவும்தூண்டுகோலாகவு மிருந்து உதவி செய்துக் கொண்டுவருகிறது. இந்தத்தடவையில் என் கூட உபாத்தியாயர் படுகெ ஆரி கவுடரும் மற்றும் சில நண்பர்களும் வந்திருந்தார்கள். இவர்கள் உதவியும் எமக்கு அதிக ஆவசிகமாகவிருந்ததின் நிமித்தம் அவர்களுக்கு என் வந்தனம் சொல்லுகிறேன்.

எடப்பள்ளி உபகாரி."

**கல்வாய்.** செங்கற்பட்டுஜில்லா கூடுவாஞ்சேரியைச் சேர்ந்த கல்வாய் கிராமத்து நமது உபகாரி பின்வருமாறு எழுதுகிறார்:—

"நான், சென்ற இரண்டுமாதங்களாய் வெளியில் சுற்றி மித்திரன், விவேகசிந்தாமணி இவைகளை வலியக்கொடுத்து வாசிக்கச்செய்து வந்ததில், சிலர் கையோப்பத்திற்கும் ஒப்பியிருக்கின்றனர். இது விஷயமாய் சபை ஏற்படுத்த ஆங்காங்கு முயற்சித்ததில், 1892ஆம் செப்டம்பர்மீ 4உ கல்வாயில் ஓர் மீட்டிங்கு கூட்டினேன். வெளியூர்களிலிருந்து வந்தவர்கள் 7 - பெயர், உள்ளூரார் 8 - பெயர், இவர்களில் சிலர் மெம்பராக வாக்களித்தார்கள். வருகிற மீட்டிங்கில் சிலர் மெம்பாராய்விடுகிறோமென்றார். தாங்களெனக்கருளிய விவேகசிந்தாமணி 3 - சஞ்சிகையும் மித்திரனும் என்னிடம் இரண்டொருதினந்தவிற மற்றக் காலமெல்லாம், திருப்போரூர், நெல்விக்குப்பம், கடம்பூர், மடயத்தூர் முதலிய விடங்களெல்லாம் சஞ்சாரஞ்செய்கின்றன. விவேகசிந்தாமணியானவள் இத்தருணம் வெளியிலிருக்கின்றனளாதலில் வாக்குறுதிநாமா அவள் வந்ததும் கையெழுத்துச் செய்தனுப்புகிறேன். இம்மாதக்கடையில், இனி கூடும் மீட்டிங்கின் விவகாரங்களைத் தெரிவிப்பதுமன்றி யான் செய்த வேலைகளையுந் தெரிவிக்கிறேன்."

## விசேஷக்குறிப்புகள்.

**இங்கிலாந்தில் கவர்ன்மெண்டு மாறுதல்** ஜூலை மாசக் கடைசியில் பார்லிமெந்து ஜெனரல் எலெக்ஷன் நடந்து புதுப்பார்லிமெந்து கூடினதைப்பற்றிச் சொன்னோம். அங்கிலேய இராஜாங்கத்தில் எப்போதும் உ-பெரிய கக்ஷிகள் உண்டு. ஒரு கக்ஷிக்கு கன்ஸர்வேடிவ் கக்ஷியென்றும், மற்றொருகக்ஷிக்கு லிபரல் கக்ஷியென்றும் பெயர். கன்ஸர்வேடிவ் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் உள்ள ஸ்தாபனங்களை யுள்ளபடி பாதுகாத்து நூதனமான மாறுதல்கள் அதிகமின்றி துரைத்தனத்தை நடத்துவதே சரியென்கிற கொள்கையுடையவர்கள். லிபரல் கக்ஷியார் "பழயன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினனே" என்பதின் உண்மையை மேற்கொண்டு பிரஜாகோடிகளின் நன்மையையே மேலாகவெண்ணி அவர்களுடைய க்ஷேமாபிவிர்த்திக்குச் சாதகமாகிய சீர் திருத்தங்களைச் செய்து துரைத்தனம் நடத்துவதே உண்மையான துரைத்தனமுறை யென்கிற கொள்கையுடையவர்கள். இவர்களில் ஒரு கக்ஷியார் அதிகாரத்திலிருந்தால், மறுகக்ஷியார் அவர்களுக்கு எதிரிகளாகவிருந்து அவர்கள் செய்கைகளில் குற்றங் கண்டுபிடித்துக் குறைகூறுவதே வேலையாக விருப்பார்கள். அங்கிலேயநாடு அரசு முன்றப்படி யாளப்படுவதாயினும் ஜனப் பிரதிநிதி துரைத்தனம் அத்தேசத்தில் ஏற்பட்டு வேரூன்றியிருப்பதால் ஜனங்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக எதுவும் செய்யக்கூடாது. அரசன் ஜனங்களுடைய நம்பிக்கையை யிழந்த மந்திரிகளை வைத்துக்கொண்டு துரைத்தனம் செய்வதும் கூடாதகாரியமாம். பார்லிமெந்து காமன்ஸ் சபை, ஜனங்களால் நேரில் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகளடங்கிய சபையாதலால் அச்சபையில் பெரும்பான்மையோர் அபிப்பிராயம் எதுவோ அதுவே மொத்தத்தில் ஜனங்களுடைய அபிப்பிராய மாகவும் கொள்ளப்படும். பார்லிமெந்துசபையில் பெரும்பான்மையோருடைய அபிப்பிராயமும் ஜனங்களுடைய அபிப்பிராயமும் ஒருவிஷயத்தில் வித்தியாசப்படலாமென்று அரசுக்காவது அரசனுடைய மந்திரிகளுக்காவது தோன்றினால் அரசன் தன்மந்திரிகள் சொல்லைக்கேட்டு அப்பார்லிமெந்துசபையைக் கலைத்துவிட்டு புதுப் பார்லிமெந்து சபை கூட ஜெனரல் எலெக்ஷன் நடக்கும்படி உத்திரவுசெய்வார். அப்படிக் கூடப்படும் புதுப் பார்லிமெந்து சபையில் பெரும்பான்மையோருடைய அபிப்பிராயம் மொத்தத்தில் ஜனங்களுடைய அபிப்பிராயமாகக் கொள்ளப்படும்.

சென்ற ஆகஸ்டுமாசம் புதுப் பார்லிமெந்து சபை கூடியதும் லிபரல்கக்ஷி மெம்பர்கள் அப்பொழுது அதிகாரத்திலிருந்த கன்ஸர்வேடிவ்கக்ஷி மந்திரிகளிடத்தில் ஜனங்களுக்கு நம்பிக்கை இல்லையென்று காமன்ஸ்சபையில் பிரேரேபித்துப் பேசினார்கள். இதுஅவர்கள் சொந்தக்கக்ஷி பலத்தால் பார்லிமெந்து சபையில் பெரும்பான்மையோரால் அங்கீகரிக்கப்படவே பழயமந்திரிகள் அந்நாட்டு பிரதிநிதியரசு முறை யேற்பாட்டுப்படி அவர்கள் வேலைகளை மகாராணியவர்களிடம் இராஜிநாமா கொடுத்துவிட்டார்கள். மாக்ஷிமைதங்கிய மஹாராணியவர்கள் அவர்கள் இராஜிநாமாவை யேற்றுக்கொண்டு லிபரல் கக்ஷித்தலைவரான மிஸ்டர் கிளாட்ஸ்தனை வரவழைத்துப் புதிதாக மந்திராலோசனை சபையொன்று ஏற்படுத்தித் துரைத்தனம் நடத்தக் கட்டளையிட்டார்கள். அப்படியே மிஸ்டர் கிளாட்ஸ்தனும் முதல்மந்திரி வேலையை ஒப்புக்கொண்டு அவரோடு உடன்மந்திரிகளாக விருக்கத்தக்கவர்களைப் பொறுக்கியெடுத்துச் சிபார்சுசெய்து மகாராணியாரால் அவர்களை உடன்மந்திரிகளாக நியமிக்கப்பெற்று இப்பொழுது துரைத்தனம் நடத்திவருகிறார். இப்படி ஒருகக்ஷியார் அதிகாரத்தைவிட்டுப் போக எதிர்க்கக்ஷியார் அதிகாரத்துக்கு வருவதற்கு 'கவர்ன்மெண்டு மாறுதல்' அல்லது 'துரைத்தனமாறுதல்' என்று சொல்லுகிறது. இப்பொழுது அத்தேசத்திலுண்டான் துரைத்தன மாறுதலினால் அதிகாரத்துக்கு வந்த கவர்ன்மெண்டில் முக்கியமந்திரிகள் பின் வருகிறவர்கள்:—

மிஸ்டர் கிளாட்ஸ்தன்,—முதல் மந்திரியும் அரசிறைமந்திரியும்.

| | |
|---|---|
| லார்ட் சான்ஸெல்லர் அல்லது சிரேஷ்ட நியாயாதிபதி | லார்ட் ஹேர்ஸ் செல் |
| இந்தியா மந்திரி | லார்ட் கிம்பர்லி, |
| பிரதேசீ மந்திரி | லார்ட் ரோஸ்பரி, |
| குறயேற்றநாட்டுமந்திரி | லார்ட் ரிப்பன் |

| | |
|---|---|
| உள்நாட்டு மந்திரி | மிஸ்டர் அஸ்குவித். |
| யுத்தமந்திரி மிஸ்டர் எச். | காம்பெல் பானர்மான் |
| கப்பற்சைனியமந்திரி | லார்ட் ஸ்பென்ஸர். |
| அரசிறை மந்திரி | ஸர் உவில்லியம் ஹார்கோர்ட். |
| ஐர்லாந்து சீப் செக்ரிடெரி | மிஸ்டர் ஜான் மார்லி |
| ஸ்காட்லாந்து சீப் செக்ரிடெரி | ஸர் ஜியார்ஜ் டிரிவேலியன். |
| வியாபார விசாரணை சபைத்தலைவர் | மிஸ்டர் மண்டெல்லா. |
| லோகல் கவர்ன்மெண்டு விசாரணை சபைத்தலைவர்- | மிஸ்டர் எச். பௌலர். |
| போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் | மிஸ்டர் ஆர்நால்ட் மார்லி. |

---

**வியவசாயிகளுக்குக் கடன் கொடுத்தல்.**

௧௮௯௨௵ மார்ச்சு௴ ௮௳யில் கவர்ன்மெண்டார் பின்வரும் உத்தரவு செய்தார்கள்:- "நில அபிவிர்த்தி ஆக்ட்டுப்படிக்கும் வியவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதற்கான ஆக்ட்டுப்படிக்கும் கடன் கேட்கும் குடிகளுடைய விண்ணப்பங்களை விசாரித்துப் பைசல்செய்து கடன் கொடுப்பதில் அமிதமான தாமசமுண்டாகிறதென்பது பத்திரிகைகள் மூலமாக ஆலோசனை சபையிலுள்ள கனம்பொருந்திய கவர்னர் அவர்கள் கவனத்துக்கு வந்திருக்கிறது. அவருக்கு எட்டிய சில விஷயங்களினால் இம்முறைப்பாடுகளெல்லாம் மிகவும் உண்மையானவையேயென்று தெரியவருகிறது. இப்படி நேரிடும் தாமசங்களுக்குக் காரணம் இப்பொழுதுள்ள சிப்பந்திகளுக்கு ஏராளமாய்வரும் விண்ணப்பங்களை விசாரித்துப் பைசல் செய்வது முடியாமையாகவிருப்பதேயென்று ஆலோசனை சபையிலுள்ள கனம்பொருந்திய கவர்னர் அவர்களுக்குத்தெரியும். இதற்குப் பரிகாரம் இப்பொழுதுள்ள ஸ்பெஷல் ரெவினியூ இன்ஸ்பெக்டர்கள் தொகையை யதிகரித்துப் பலப்படுத்துவதேயாம். ரெவினியூ போர்டார் பக்கத்தில் குறித்த ஜில்லாக்களின் கலெக்டர்களை அவரவர்கள் ஜில்லாக்களில் இப்பொழுது பைசலாகவேண்டியிருக்கும் விண்ணப்பங்கள் எத்தனையென்றும், அவைகளின்படி கடன் கொடுக்கவேண்டிய தொகைகளின் மொத்தம் இவ்வளவென்றும் தாலூகாவாரியாகக் கணக்குத் தயார்செய்து அவ்விண்ணப்பங்களைச் சீக்கிரம் விசாரித்துப் பைசல்செய்து இனிமேல் வரும் இவ்வித விண்ணப்பங்களைத் தாமசமின்றிப் பைசல் செய்துவர அதிகப்படிவேண்டிய சிப்பந்திகள் எத்தனை பேரென்றும் உடனே விசாரித்துச் சிறிதும் தாமசமின்றி அவசரமாய் ரிபோர்ட்டு செய்யும்படி கேட்டுக்கொள்ளக் கோரப்படுகிறார்கள்."

இவ்வுத்தரவில் குறிக்கப்பட்ட ஜில்லாக்கள் நெல்லூர், கர்னூல், பல்லாரி, அனந்தப்பூர், கடப்பை, செங்கற்பட்டு, வடஆற்காடு, தென்னாற்காடு, சேலம், கோயமுத்தூர். இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டபின் காலசுபாவம் மாறி அங்கங்கே கொஞ்சம் மழை பொழிய ஆரம்பித்தது. இதனால் அங்கங்கேயிருந்த க்ஷாமம் குறைந்து கொஞ்சம் சுபிக்ஷம் தோன்ற ஆரம்பித்தது. இதனால் கடன் கொடுப்பதற்காக அசாதாரணமான விசேஷ ஏற்பாடுகள் செய்யவேண்டியதில்லையென்று அதிகாரிகள் அபிப்பிராயங் கொண்டார்கள். மேற்கண்ட உத்தரவுப்படி பல டிஸ்திரிகட்டுகளிலிருந்து வந்த ரிப்போர்ட்டுகள் ரெவினியூ போர்டாரால் பார்வையிட்டு சில ஜில்லாக்களில் மட்டும் அதிகப்படி சிப்பந்திகள் நியமனம் செய்ய சாங்க்ஷனாயிருக்கிறது. இவர்கள் பார்வையிட்டனுப்பிய ரிபோர்ட்டுகளின்பேரில் கவர்ன்மெண்டார் செய்திருக்கும் உத்தரவில் "கிணறுகள் வெட்டுவதற்காகக் குடிகள் கவர்ன்மெண்டாரிடம் கடன்வாங்கி யுபயோகிக்கத் தூண்டிவர எடுத்துக்கொள்ளப்பட்ட ஏற்பாடுகள் இந்தமட்டும் பயன்படுவனவாக முடிந்ததைக்காண கவர்ன்மெண்டார் சந்தோஷப் படுகிறார்கள்" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இத்தேசத்தில் இடையிடையே சம்பவிக்கும் க்ஷாமகாலங்களில் ஜனங்கள் படும்துன்பங்களைக் குறைத்து மிதப்படுத்த இப்படி குடிகளுக்கு சொற்ப வட்டிக்குக் கடன்கள் கொடுப்பதே ஏற்ற மார்க்கமென்று ஆலோசனை சபையிலுள்ள கனம்பொருந்திய கவர்னர் அவர்களுக்கு உறுதியாய் மனதில் பட்டிருக்கிறதென்றும், ஆனால் இவ்வகையில் இன்னும் அதிகப்பணம் செலவழிக்குமுன் இப்பொழுது அனுசரிக்கப்பட்டுவரும் ஏற்பாடு காரியத்தில் சரியாக நடந்து வருகிறதா? அதாவது கவர்ன்மெண்டாரிடம் குடிகள் வாங்கும் கடன்களுக்கு நல்ல ஈடுகள் கிடைக்கின்றனவா, கடன்வாங்கின பணம் துர்வினியோகப் படுத்தப்படாமல் கிணறுகள் வெட்டுவதில் சரியாக உபயோகிக்கப்பட்டு வருகின்றனவா, கடன் தொகைகள் கிரமம் தவறாமல் திருப்பிக் கொடுக்கப் படுகின்றனவாவென்று தீர விசாரித்தறிந்து கொள்ள வேண்டிய தவசியமாகவிருக்கிறதென்றும், கவர்ன்மெண்டார் அவர்களுடைய உத்தரவில் கண்டிருக்கிறார்கள். மேலேசொன்ன முக்கியமான நிபந்தனைகளெல்லாம் சரியாக நிறைவேறி வந்தால், மழை தப்பிக் காலங்கெட்டிருக்கையில் பயிர்ச்செலவு நின்று மகசூல் தவறிப்போகாமலிருப்பதற்கு உறுதியுபாயமாக இவ்விதக் கடன்கள் கொடுப்பதில் பணஞ் செலவழிப்பதைப்போல் வேறு வழியில்லையென்று சொல்லி மேலேசொன்ன நிபந்தனைகள் சரியாக நிறைவேறி வரத்தக்கனவாகவிருக்கின்றனவாவென்று தீரவிசாரித்து இந்த வருஷம் டிசெம்பர் மாசத்துக்குள் ஜில்லா கலெக்டர்களெல்லாம் ரிபோர்ட்டுகளனுப்ப வேண்டுமென்றும், அதன்மேல் அந்தரிபோர்ட்டுகளைக் கொண்டு அடுத்த வருஷத்தில் இத்தலைப்பின் கீழ் செலவு செய்யவேண்டிய விதத்தை யோசித்துத் திட்டம்செய்துகொள்ள வேண்டுமென்றும் கவர்ன்மெண்டார் உத்தரவு செய்திருக்கிறார்கள். இந்த வருஷத்திற்கு ஸெப்டெம்பர்௴ ௩௰௳க்குப் பின்னிட்டுக் குடிகளிடமிருந்து கடன்களுக்காக விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளவேண்டியதில்லையென்றும், இந்த வருஷத்தில் குடிகளுக்குக் கொடுக்கும் கடன்களின் தொகைகள் மொத்தம் ௨௯-லக்ஷத்துக்குமேலதிகப்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் உத்தரவு செய்திருக்கிறார்கள். எங்கும் மழைபெய்து சுபிக்ஷகாலந் தலைகாட்ட ஆரம்பித்து விட்டதால் வியவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதற்கான சட்டப்படி இனி அதிகமாய்க் கடன்கள் கொடுக்கவேண்டியதில்லை என்று போர்டார் சொல்வதைச் சரி என்று கவர்ன்மெண்டார் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.